3-5

உ

ஓம் தத் ஸத்

**ஸ்ரீ அருணகிரி நாதர்**

அருளிய

# கந்தர் அனுபூதி

மூலமும்

**நீலகண்டீய உரை விளக்கமும்**

உரை ஆசிரியர் :

தவத்திரு

**நித்தியானந்த சுவாமிகள்**

வேட்டைக்காரன்புதூர்




இஃது

பொருள் உதவி செய்து வெளியிட்டவர்

**தி. அருணசலக் கவுண்டர் அவர்கள்**

காளியாபுரம் (சோமனூதபுரம்)

வேட்டைக்காரன் புதூர், மெஜரா.

ஸ்ரீ அருணகிரிநாதர்

அருளிய

# கந்தர் அநுபூதி

மூலமும்

நிஷ்கண்டைய உரை விளக்கமும்

உரை ஆசிரியர்:

தவத்திரு

நித்தியானந்த சுவாமிகள்

வேட்டைக்காரன்புதூர்

இஃது

பொருள் உதவி செய்து வெளியிட்டவர்

ஸ்ரீ அருணாசலக் கவுண்டர் அவர்கள்

...புரம் (சோபனுதபுரம்)

...டக்காரன்புதூர், மெஜரா.

Acc. No: 1173

Δ2,11 (ஆரு)

உ

ஓம் தத் ஸத்

ஸ்ரீ அருணகிரி நாதர்

அருளிய

# கந்தர் அநுபூதி

மூலமும்

## நீலகண்டீய உரை விளக்கமும்

உரை ஆசிரியர் :

தவத்திரு

நித்தியானந்த சுவாமிகள்

வேட்டைக்காரன்புதூர்


KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 1173

இஃது

பொருள் உதவி செய்து வெளியிட்டவர்

தி. அருணாசலக் கவுண்டர் அவர்கள்

காளியாபுரம் (சோமனூதபுரம்)

வேட்டைக்காரன் புதூர், மெஜாா.

ஓம் தத் ஸத்.



அயம் ஆத்மா பிரஹ்மம்

அன்பே சிவம்

நீலகண்டீய உரை விளக்க ஆசிரியர்

**தவத்திரு. நித்தியானந்தசுவாமிகள்**




ஓம் தத் ஸத்

# முகவுரை

அன்புடையீர் !

இவ்வுலகின் கண்ணே நம் குணகடல் குமரி குடகம் வேங்கடம் என்னும் எல்லையுள் அமைந்த செந் தமிழ் நாட்டில் உள்ள அரும் பெரும் தவத்தினர் பல ருள் அருங்கவி வாதவூர் அடிகள் முதலியோர் பாடி அருளிய அருட்கவிகளே போன்று தெய்வப் புலமை வாய்ந்த புலவர் பெருமக்கள் பலருள் ஸ்ரீ முருகப் பெரு மானது திருவருள் பெற்று அப்பெருமானது புகழ் களையே பாமாலைகளாக அநேக பிரபந்தங்களை பாடி யருளிய ஸ்ரீ அருணகிரிநாதர் தாம் கிளி ரூபமாய் இருந்து கொண்டே கந்தரது, அநுபூதியைப் பெற்று அவ்வநுபூதியின் வலியால் அருளிய கந்தர் அநுபூதி என்னும் ஒரு பிரபந்தத்தினை இயற்றி அருளினர். அப் பிரபந்தத்தில் வேதங்களின் முடிபொருள்களே காணப் படுகின்றது. அதற்கு உரை செய்ய விரும்புவோர் வேதாந்த சித்தாந்தப் பயிற்சியை தர்க்கரீதியாக அநு பூதியடைந்துள்ள பெரியோர்பால் வழுவறக் கற்று அதன் வழி நின்றவர்களல்லவா அந்நூற்கு உரை செய்ய வேண்டும். அப்படி இயற்றிய உரையல்லவா பாராயணம் செய்யும் அன்பர்களுக்கு அதில் உள்ள பொருள் விளக்கத்தோடு பாராயணஞ் செய்து அதன் பயனை அடைய வேண்டுமென யாம் கருதியதால் நீல கண்டத்தை மறைத்து நீலகண்டன் என்னும் நாமமும் மாநுட உருவமும் தாங்கி வந்து எம்மை ஆட்கொண் டருளிய அருள் வள்ளல் எமக்களித்த மதியின் அளவே இந்நூற்கு உரை செய்ததால் நீலகண்டீய உரை விளக்கமென்று நாமம் கொடுக்கப்பட்டுள்ளது.

யாம் அறிவின் வயமாய் நின்று அருளியதால் இந் நூலினது பொருளை உணர்ந்து பாராயணம் செய் பவர்கள் கேட்பவர்கள் யாவருமே ஸ்ரீ முருகவேளினது திருவருள் பெற்றவராய் இருமை இன்பமும் எளிதினில் எய்தி நீடுழி இன்புற்று வாழ்ந்து முடிவினில்,

நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற்கு அருளியதே போன்று

இவர்களுக்கும் அருள வேண்டுமென எல்லாம் வல்ல அருட்பெருஞ் சோதி தனிப்பெருங் கருணை முழுமுதற் பொருளின் அருள் வயமாய் நின்று சத்திய சங்கல்ப மாகப் பிரார்த்திக்கின்றேன்.

"கைமாறு வேண்டா கடப்பாடு மாரி மாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு"

எனக் கூறிய பொய்யா மொழியை ஒப்ப இந்நூல் வெளியிட்டு யாவர்க்கும் பயன்படுமாறு (250) ரூபாய் கொடுத்து உதவிய காளியாபுரம் (சோமனூதபுரம் தி. அருணாசலக் கவுண்டர் அவர்கள் மூவேழ் சுற்றமும் இருமை நலனும் எளிதினில் எய்தி இன்புற்று நீடுழி வாழ்ந்து முடிவினில் வீட்டின்பத்தையும் அடைய வேண்டுமென எல்லாம் வல்ல அருட்பெருஞ் சோதி தனிப்பெருங் கருணை முழுமுதற் பொருளினது அருள் வயமாய் நின்று செய்துள்ள சத்திய சங்கல்பமே யாகும்.

இதுவே அவர்கள் செய்துள்ள நன்றியைப் பாராட்டியதாகும்.

"மனமெனும் பகையை வென்றோர்
மலரடி முடிமேற் கொள்வாம்"

மனத்தை வெல்லுந் திறனுவது,

ஊக நன்மையால்! அல்லது வெலப்படாது உள்ளம்
வேகமத்தமா! அங்குசத்தலால் வெலப்படுமோ!
ஏகபோதத்தை அறிதல்; நல்லவருடன் எய்தல்
சோகவாதனை விடல் உயிர் தோன்றுரு தொடுக்கல்.

என வாசிட்ட நூல் கூறும்.

இங்ஙன்

**சுவாமி. நித்தியானந்தா அவர்கள்**

வேட்டைக்காரன்புதூர்

பொள்ளாச்சி T. K.

உ

சிவமயம்

# ஸ்ரீ அருணகிரிநாதர் வரலாறு

தமிழ் நாட்டில் வழங்கி வரும் பிரபல மதங்களாகிய சைவ வைணவங்களுள், சைவம் காணுபத்தியம் கௌமார முதலிய சில உட்பிரிவுகளையுடையதாயிருக்கும். அவ்வுட்பிரிவுகள் கணபதியை வழிபடுவோர் குமாரனை வழிபடுவோர் முதலிய பொருள்பட்டு நிற்கும். இவ்வுட்பிரிவுகளைச் சைவத்தின்பாற் படுவனவாகக் கௌமாரரிலரென்றுரைத்தல் கூடாது. எச்சமயத்திற் சிறந்தவரேனும் குமாரனை யுபாசிப்போரெல்லாம் கௌமாரரெனப்படுவார். குமாரக் கடவுள் கலியுக வரதரென்றும், இதர தேவர்களை விட்டு அவரை யுபாசிப்போர் இக்காலத்திற் பிரசாதம் விரைவிற் பெறுவ ரென்றும் தமிழ் மக்களுள் நம்பிக்கை பரவியிருப்பதாகத் தெரிகின்றது. பூதத்தாற் குகையிலடைக்கப்பட்ட சங்கப் புலவர் நக்கீரரும் குமாரனையன்றோ வேண்டித் திருமுருகாற்றுப்படை கூறித் தங்கருத்து நிறைவேறப் பெற்றனர்!

கௌமார சமயிகள் தங்கள் சமயாசாரியரென வைத்துக் கொண்டாடும் தமிழ்ப் பெரும் புலவர்களுள்

அருணகிரிநாதர் ஒருவர். அகத்தியர், நக்கீரர், குமர குருபரர், திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் முதலி யோரை யெல்லாம் கௌமார சமயாசாரியர்களாகவே கொள்ளுகின்றனர். சிவபெருமான் குமாரனிடத்துப தேசம் பெற்றாரென்று புராணங் கூறுவதைக்கொண்டு சிவபெருமான் முதற் கௌமார சமயாசாரியரென் றுரைப்பாரும் உண்டு. மற்றைக் கௌமாரர்க்கும் அருணகிரிநாதர்க்கும் பேதம் ஒன்றுண்டு. அவர்களெல் லாம் முருகனருள் பெற்றுப் புலவராய்த் திகழ்ந்தன ரேனும் மற்றைய தேவர்களையும் பாடிப் போயினர். அருணகிரிநாதர் சொல்லிய சிறுபிரபந்தங்களனைத்தும், பதினாருயிரம் திருப்புகழும் குமாரக் கடவுள் துதிகளா கவே யமைந்துள்ளன.

அருணகிரிநாதர் திருவண்ணாமலையிற் பிறந்து வளர்ந்தவரென்றும், அவ்வூர்க் குமாரனிடத்தேயே அநுக்கிரகம் பெற்றுத் திருப்புகழ் கவி சொல்லிப் பல திருவிளையாடல்கள் செய்தவரென்றும் ஐதீகம் கூறும். அருணகிரியென்னும் அந்த ஸ்தலப் பெயரே அவர்க்கு அமைந்ததாகலின் ஐதீகம் உண்மையேயாம், ஆயினும். அவர் பட்டினத்துப் பிள்ளையார்க்கு அவ்வூர்க் கணிகை யொருத்தி வயிற்றிற் பிறந்தாரென்றால் அது தவறே யாகும். பட்டினத்தார் காலம் கி,பி. பத்தாம்நூற்றாண்டிற் குப்பிந்தியதென்றல் கூடாது. அருணகிரிநாதர் பிரபுட தேவனென்னும் ஓரரசனைப் பற்றித் தம் திருப்புகழ்களிற் கூறியுள்ளார். அவ்வரசன் கி. பி. 1424 முதல் கி. பி. 1447 வரை விஜய நகரத்திலிருந்து அரசாண்ட பிரௌட தேவராயரென்னும் அரசனென்று கொண்டு அருண கிரியாரைப் பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பாதியில் விளங்கியவரென்று தமிழ்ப் புலவர்களில் ஆராய்ச்சி

வல்லார் சிலர் கொள்ளுதலின், பட்டினத்தார்க்கும் இவர்க்கும் அவ்வித சம்பந்தம் இல்லையெனலாம். ஆயினும் பிரௌட தேவன் என அருணகிரியார் குறித்தது இம்மன்னனைத்தானென்று உறுதியாக உரைத்தலெப்படிக் கூடும்? திருவண்ணுமலைப் பக்கத்தில் அரசு செலுத்திய சிற்றரசனெருவன் பிரபுட தேவனென்னும் பெயரால் இருந்திருத்தலுங் கூடுமே. மற்று, மேற்குறித்த விஜயநகரத்தரசன் தமிழ் நாடெங்கும் தன் புகழ் நிறுத்தினவனென்பதற்கு அவன் சரித்திரத்தில் அநேக ஆதாரங்களுளவென்பதும் இவ்விடத்துக் கவனிக்கத் தக்கது.

அருணகிரியார், தமதிளமைப் பருவத்தில் வெறுப்புத் தோன்றும் வரையில் சிற்றின்பத்திலுழன்று பின் முருகன் திருவருள் பெற்றுக் கவிபாட வல்லராயினுரென அவர் பாடிய திருப்புகழ்களே தெளிவா யெடுத்துரைக்கும். முருகன் திருவருள் பெற்றபின் அவர் ஸ்தலங்கடோறும் சென்று தம்பிரானுரைத் தரிசித்துக் கவிகள் சொல்லி வந்தனர்.

அக்காலத்து தமிழிற் பாரதத்தை மொழி பெயர்த்தாருள் ஒருவராகிய வில்லிபுத்தூராழ்வார் என்னும் வைணவப் புலவரொருவர் தமிழ் வித்வான்கள் இருந்த இடங்கட்குச் சென்று அவர்களை வாதுக்கழைத்துத் தம்மோடு வாது செய்து தோற்றவர்களுடைய காதுகளைத் தமது கையிலிருந்த துறட்டுக் கோலினுல் அறுத்துத் தம் புகழ் நாட்டித் திக்குவிஜயஞ் செய்து கொண்டிருந்தார். இவர் அருணைக்கு வந்தபொழுது, அருணகிரிநாதர் சொல்லிய வண்ணப் பாக்களைக் கேட்டுப் பொருமை மேலிட்டு அவை குற்றமுடையவெனத் தம் சீடரிடத்துப்

பிரசங்கித்தார். இது கௌமார முனிவர் காதிற் பட்டும் அவர் அலட்யமாயிருந்தார். ஆயினும், நடுவிலுள்ளோர் வேண்டுகோளால் வில்லிபுத்தூராரும் அவரும் சந்திக்க நேர்ந்தது. இருவரும் தம்மிற் செய்து கொண்ட ஏற்பாட்டின்படி அருணகிரியார் கந்தரந்தாதி என்னும் பிரபந்தம் சொல்லி வரவே, வில்லிபுத்தூரார் பொருள் சொல்லி வந்தார். ஐம்பத்தி மூன்று பாட்டுகட்கு அவ்வாறு பொருள் சொல்லி அதற்குமேல் அருணகிரியார் சொல்லிய பாட்டிற்குப் பொருள் சொல்ல அறியாது விழித்தார். அருணகிரியார் அவருடைய துறட்டை யெடுத்து யாவர்க்கும் பயனிலதாகும்படி ஒடித்தெறிந்து அவர்க்கு நன்னெறி கூறிப்போக விடுத்தார் என ஒரு கதை வழங்கி வருகின்றது.

அவரைப் பற்றித் தமிழ் நாட்டில் வழங்கி வரும் மற்றொரு கதை; அருணகிரியிலேயே சம்பந்தாண்டான் என்பானொருவன் அக்காலத்திருந்தான். அவன் சமயத்தாற் சமணன்; ஆயினும், தேவி பிரசாதம் பெற்றவன். அவனுக்கும் அருணகிரியார்க்கும் வாக் வாதம் உண்டாயிற்று. அவன் "தேவியை நேரிற் காணக் காட்டுவேன், நீர் குமாரக் கடவுளைக் காட்டுக" என்றான். அரசன் இதற்குடன்பட்டிருக்கச் சம்பந்தாண்டான் திரையிட்டு வெகுநேரம் பூஜை புரிந்தும் குமாரக் கடவுள் தன் மடிமீதிருந்து தடைசெய்ததால் தேவி வரக்கூடாதவளாயினள். அருணகிரியாரோ அரசன் சம்பந்தாண்டான் மற்றுமுள்ளார் யாவரும் காணக் குமாரனை மயில் வாகனத்தின் மேலேறி வரக் காட்டினார்.

இவ்வாறு தோல்வியுற்ற சம்மந்தாண்டான் அரசனை அடுத்திருந்து, சின்னாட் கழிதலும் "அருணகிரி

நாதரைப் பாரிஜாதமலர் கொண்டு வரச் சொல்! '' என அரசனுக்குக் கற்பித்தான். அரசனும் தெய்வ மலர்மேல் ஆசை வைத்து அவரை வேண்ட, அவர் தன் தேகத்தைக் கோபுரத்தில் வைத்துக் கிளியுருக் கொண்டு மேனேக்கிச் சென்றனர். சம்பந்தாண்டான் இஃதறிந்து அத் தேகத்தை யெடுத்தெரிக்குமாறு செய்தான். அவர் தெய்வலோகத்தையடைந்து நன்குபசரிக்கப்பட்டு, பாரி ஜாத மலரைப் பெற்றுக் கொண்டு திரும்பி கோபுரத் தண்டை வந்து நோக்கலும் தம்தேகத்தைக் காணுராய்த் திகைத்து முருகப்பிரானருளால் மனந்தேறினர், பின் கிளியுருவோடேயே அரசனவைக்குச் சென்று பாரிஜாத மலரைக் கொடுத்து விட்டுத் தம்காலமெல்லாம் கோயிற் கருகில் பாடல்களைப் பாடி முருகனைத் துதித்துக்கொண் டிருந்தே பரகதியடைந்தார். கந்தரலங்காரம், கந்தர நு பூதி அருணகிரியார் கிளியுருவோடிருந்த பொழுது பாடிய நூல்கள் என்பர்.

பிற்காலத்து ஞானியருள் தாயுமானுர் அருணகிரி யாரை மிகவும் கொண்டாடியிருக்கின்றனர்:

'' ஐயா அருணகிரி யப்பா வுனைப்போல
மெய்யாகவோர் சொல் விளம்பினர் யார்?''
''யான்ரு னெனலறலே யின்ப நிட்டை யென்றநுணைக
கோன்ரு னுரைத்த மொழிகொள் ளாயோ.''
''கந்தரனு பூதிபெற்றுக் கந்தரனுபூதி சொன்ன
வெந்தை யருணுடி யிருக்குநா ளெந்நாளோ.''

ஸ்ரீ அருணகிரிநாதர் செய்த நூல்கள் : திருப்புகழ் பதினுருயிரம், திருவகுப்பு, கந்தரந்தாதி, கந்தரலங் காரம், கந்தரநுபூதி, வேல் விருத்தம், மயில் விருத்த

மென்பனவும் அவர் செய்ததாகக் கூறுவர். அவரது வாக்குச் சிறந்த வாக்கென்பது தமிழுலக முழுதும் ஒப்பியது என்பதற்கு உதாரணம்:

"வாக்கிற் கருணகிரி வாதவூ ரார்கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனூர்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்."

எனவும் கூறியுள்ளன!

அன்பே சிவம்

உ

வெற்றி வேலுற்ற துணை

# கந்தரநுபூதி மூலமும் நீலகண்டீய உரை விளக்கமும்

## காப்பு

### சந்தக்கலி விருத்தம்

1. நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமாலை சிறந்திடவே
பஞ்சக்கர ஆனைபதம் பணிவாம்!

நீலகண்டீய உரை விளக்கம் :—நெஞ்சக் கனகல்லு= நெஞ்சமாகிய கனமுள்ள கல்லானது! நெகிழ்ந்து உருக=நெருப்பிலிட்ட மெழுகு போன்று கசிந்து உருகும்படி! தஞ்சத்து அருள் =தன்னை அடைந்துள்ள அடியவர்களின் எளிமைக்கு அருள் செய்கின்ற! சண்முகனுக்கு=ஆறு திருமுகங்களையுடைய பிள்ளையாருக்கு! இயல் சேர் செம் சொல் புனை=இலக்கணப் பாகுபாடமைந்து விளங்கும் செவ்விய சொற்களைக் கொண்டு அலங்கரிக்கின்ற! மாலை சிறந்திட=பாமாலை சிறப்புற்று நிலைபெறும்படி! பஞ்சக்கர ஆனை பதம் பணிவாம்=ஐந்து கரங்களையும் யானை முகத்தினையும் உடைய விநாயகரது திருவடிகளை நாம் வணங்குவாம்!

விசேட உரை :—எந்நூல்கள் இயற்றினும் அந்நூற்குப் பாயிரமுரைத்தல் மரபாகலின் இந்நூலாசிரியர்

தாம் நூற்கு ஏற்புடைக் கடவுளை வழிபாடு செய்துளார்! இப்பாயிரம் பொதுப்பாயிரமென்பர் காப்பு=ரட்சிப்பு மங்கலம்=விக்ன நிவிர்த்திக்காகச் செய்ய வேண்டும்! நூல் முடிவை விரும்புவோன் காப்பியற்றுக என்னும் விதியுளது! அதில் மங்கலம் மூவிதம் வாழ்த்துதல் வணங்குதல்! பொருள் இயல்புரைத்தல் என இம்மூன் றில் இது வணங்குதல் ஆகும்! இங்கு கந்தர் அநுபூதி எனின் தற்சிறப்புப்பாயிரம் என்றும் கொள்ளலாம்.

'' தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த உரைப்பது தற்சிறப்பாகும்'' என்பர்.

பெரியோர்! செம்மை என்றது, உலகம் மலே யாமை உள்ளிட்ட பத்தழகையும்! செய்யுட்டொகு தியை மாலே என்ருர். ஐவகை இலக்கணமும்! ஒழுங்குற அமைதலின் மாலே என்ருர்! இது அக்கடப்பமாலேயினும்! இது வாடாமையை நோக்கிச் சொற்புனைமாலே என்ருர் =எனினும் அதுவும் அமையும்! யானை முகத்தினரை யானை என்றது உடம்பினும் தலே சிறந்ததாகலின்! பணி வாம் என்ருர். தம்போலியரைத் தம்மோடு படுத்தி! கல்லு என்புழி உகரம் சாரியையாகக் கோடலே யன்றிக்! கல்லும் எனக்கொண்டு உயர்வு சிறப்பும்மையாக்கினும் அமையும் ஏனைய கற்களை போலல்லாது மிகத் திண்ணியதாகலின் நெஞ்சைக் கனகல் என்ருர் சண்முகன் என்றது! 'இங்கு குண்டலியோடிச்சை கிரியை ஞானமாதி பரையாய ஐந்து சத்திகளையும் திருமுகங்களாக வுடைமையை இங்ஙனங் கூருது! ஐஸ்வரியம்! வீரியம்! புகழ்! திரு ஞானம்! வைராக்கியம் என்னும் அறுவகைக் குணங் களுடன் கூடிய குமாரக் கடவுளுக்கு உண்மையில் அவரை மகான்கள் சாட்குண்ய ரூபமாயுள்ள சண்முகன் எனக் கூறும் என்ருர்!

இனி மூலாதாரம்! சுவாதிஷ்டானம்! மணிபூரகம்! அனுகதம்! விசுத்தி! ஆஞ்ஞை என ஆறு ஆதாரங்களிலு முள்ள அதிதெய்வங்களையே முகங்களாகவுடையோன் எனினுமாம்! கந்தர்! அநுபூதி! கந்தரநுபூதி பெற்றுப் பாடிய நூலென விரிவதாயிற்று. ஆருவதன் றெகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்துகையாய் இந் நூற்குக் காரணக்குறி! அநுபூதி = அநுபவ ஞான மெனினும் பொருந்தும். பேசா அநுபூதி பிறந்ததுவே! என்றதனாலுமுணர்க.

கந்தர் என்றது பிள்ளையார் ஆறு திருவுருவங் கொண்டு சரவணப் பொய்கையிற் கிடப்ப சிவபெருமானது ஆணையாற் உமையம்மை ஆறும் ஒன்று சேர்த்தெடுக்க ஓருருவாய தன்மையைக் கண்டு கொடுத்துள்ள நாமமாகும்.

இந்நூல் முழுவதும் பா நான்கனுள் கலிப்பாவின் இனமாக அளவடி நான்கான் அமைந்து கலிவிருத்தத்தின் பாற்பட்டுச் சந்தத்தமைந்த செய்யுளாகலின் சந்தக் கலி விருத்தமென்க.

"அளவடி நான்கின கலிவிருத்தம்மே" என்றார் ஆகலின்!

இதனை யறியாதார் மாகயமெனப் பிரித்திடர்ப்படுப, 'ஆடும் பரிவேல்' என்புழியும் எனவென்னு மெண்ணிடைச் சொல்வியக்க.

'கயமா முகனைச் செருவிற்' சாடுந்தனியானை

என்றது கயமுகா சூரனை விநாயகர் தமது கொம்பொடித்துக் கொன்றமையை, 'தனியானை' என்றார். ஒற்றைக் கொம்பையுடையதோர் யானை பிறிதொன்

றின்றுகலின். வயிர வடிவினையுடைய சூர்ப்பகை வேலாற் பிளக்கப்பட்டு மயிலுஞ் சேவலுமாயினமையை,

..................................''போரவுணன்
அங்கமிரு கூறு யடன் மயிலுஞ் சேவலு மாத்
துங்கமுட னுர்த்தெழுந்து தோன்றுதலு—மங்கவற்றுட்
சிறுமர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
வேறிநடாத்து மிளையோனே!—மாறிவரு
சேவற் பகையைத் திறல்சேர்ப தாகையென
மேவத் தனித்துயர்ந்த மேலோனே!''

என்றதனுனு முணர்க, 'அணிசேவலனை' எனவும் பாடங் கூறுவாறுமுளர்.

1. ஆடும் பரிவேல் அணிசேவல் எனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவிற்
சாடும் தனியானை சகோதரனே.

நீலகண்டீய உரை விளக்கம்:—ஆடும் பரியென = ஆட்டத்தினையுடைய வாகனமாய் மயிலையும் (பிரணவ வடிவமாயமைந்த மயிலினையும்) வேல் என = வேற் படையினையும்! அணிசேவல் என = அழகிய சேவற் கொடியையும்! பாடும் பணியே = அதனைப் பாடுகின்ற பணியினையே! பணியாய் அருள்வாய் = எனக்குத் தொழிலாக அருள் புரிதல் வேண்டும்! தேடுங்கயமா முகனை = போர் புரிவதற்குரிய பகைவர்கள் எங்குளா ரெனத் தேடுகின்ற யானைமுகாசுரனை! செருவிற் சாடும் = போரிற் பொருதுவென்ற! தனியானை சகோதரனே = தனக்கொப்புயர் விகந்த யானை முகப்பிள்ளையார்க்கு இளைய பிள்ளையாரே!

விசேட உரை:—'ஆடும்பரி' என் உம் விகுதி இயல்புப் பொருட்டு 'சாடுந்தனியானை' என்புழிச்

சாடும் என்றது காலவழுவமைதி. எஞ்ஞான்று மழிதன் மாலையவாய பிறப்பிடையரு நிற்பத் தவம்புரிந்த சூரனை யிலேசி லுரம் பிளந்த வைவேலின் முன்னரும் பின்னரும் சுத்தமாயையாகிய வச்சூரனது விகாரவடிவாய மயிலையுஞ் சேவலையுமடை கொடுத்துக் கூறினமையால் ஞானசக்தி வடிவமாய வேலினது சிறப்பையு மிவன் உரத்தையு முணர்த்தியவாறு; அற்றாகலின் அன்றே வேற்கு அடை கொடாதிருந்தமை என்க. இக்கருத்தே பற்றியன்றோ திருக்கோவையாருள் "திருவளர் தாமரை" என்னுஞ் செய்யுளில் முலைக்குவமையாயக் கோங்கை யடைகொடா தொழிந்ததூஉ மென்க: இதனைப் பேராசிரியருரையானு முணர்க

இனி வேற்படையது சிறப்பை

"மறுவில் கொற்றத்தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்"
"தற்பெயர் புணர்த்திக் கற்பினொடு கொடுத்த
வமையா வென்றி யரத்தநெடு வேலாய்!"

என்றும் பிறருங் கூறியவாற்றானுமுணர்க. 'பாடும்' என்புழி உம் விகுதி நிகழ்காலத்து, 'அணி' என்பதனை கடைநிலைத் தீவமாகக் கொண்டு அணித்தான வெனப் பொருள் கூறுவாறுமுளர். ஏ-பிரி நிலை. பணியாக வென்பது ஈறு தொகுத்தலாய் நின்றது. கயமா—இரு பெயரொட்டுப் பண்புத் தொகை;

2. உல்லாச நிராகுல யோக இதச்
சல்லாப விநோதனும் நீயலையோ
எல்லாமற என்னை இழந்த நலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே

நீலகண்டீய உரை விளக்கம்:— உல்லாசனும் = (உண்மை அறிவானந்த வடிவமே சொரூபமாகலின்)

ஆனந்தத்தினையுடையவனும்! நிராகுலனும் = வரம்பி லின்பமுடைமையின் யாதொரு வருத்தமும் இல்லாத வனும்! யோகனும் = மனமும் பொறிகளும் தன்வயப் படுத்திய வீரனும்! இதனும் = எல்லாவுயிர்களுக்கும் நன்மை செய்வோனும்! சல்லாபனும் = களிப்பினை யுடையவனும்! வினோதனும் = அனுக்கிரகங்களையே விளையாட்டாகவுடையவனும்! நீ அலையோ = நிரதிசயா னந்த வடிவமாயுள்ள நீயேயல்லவா! ஆகலின்! என்னை = சீவத்துவ வடிவமாயுள்ள என்னையும்! எல்லாம் = சக சீவபரங்களாயுள்ள நாமரூபவடிவமாயுள்ள யாவற்றை யும் அதற்குக் காரணமாயுள்ள அஞ்ஞானத்தையும்! அற = இவை முழுதும் கொட்டொழிய! இழந்த நலஞ்சொல் லாய் = சகல கேவலங்களைக் கடந்த துரிய வடிவமாயுள்ள பரம்பொருளிதுவென எனக்கு உண்மை ஞானத்தால் உபதேசம் செய்தருள்வாயாக! முருகா = என்றும் மாறாத இளமை வாய்ந்தவனே! சுரபூபதியே = விண்ணுல கினர்க்குத் தலைவனே;

விசேட உரை :—உல்லாச மாதி அறுகுணங்களுள் 'உல்லாசம்' என்றது ஐசுவரியத்தை, 'நிராகுலம்' என்றது வைராக்கியத்தை, 'யோகம்' என்றது ஞானத்தை, 'இதம்' என்றது புகழை, 'சல்லாபம்' என்றது திருவை, 'விநோதம்' என்றது வீரியத்தை! இவ்வறு குணங்களே இறைவன் அதோ முகமொன்ற னோடு சத்தியோசாதமாகி ஆறுமுகங்களினின்றும் ஆறு பொரிகளாகத் தோன்ற அவற்றைப் பெருமான் கட்டளைப்படிக் காற்றுக் கடவுளும் கனற் கடவுளுங் கங்கையிற் சேர்ப்ப அக்கங்கை சரவணப் பொய்கையிற் கொடுபோக வாங்குப்பது மப்பாயலி லாறு பிள்ளை களாகக் கிடப்பப் பிராட்டியாரோடும் பெருமான் அங் ஙன் எழுந்தருளி, "பாவாய்" பிள்ளையைக் கொடுவா!" என, அவ்வாறையு மெடுப்ப வோருருவாகலினும் மை

கொடுத்து 'நீயலேயோ' என்றார். 'எல்லாமற' என்றது தத்துவங்களனைத்தினையுமிது வது வல்லவென் றறக் களைதலே. தேவர் சேனாதிபதி யாகலின் பிள்ளையாரைச் 'சுர பூபதியே' என்றார்.

3. வானோ புனல் பார் கனல்மா ருதமோ
ஞானோத யமோ நவில்நான் மறையோ
யானோ மனமோஎ னையாண்டவிடந்
தானோ பொருள் ஆவது சண்முகனே!

நீலகண்டீய உரை விளக்கம் :—வானோ = ஆகயமோ ! புனலோ = நீரோ! பாரோ = நிலனோ! கனலோ = நெருப்போ! மாருதமோ = காற்றோ! ஞானோதயமோ = உண்மைஞானத்தின் பிறப்பிடனோ! நவில் நான் மறையோ = சொல்லப்படுகின்ற நான்குவேதங்களோ! யானோ = ஆத்மாவோ! மனமோ = மனனோ! எனை ஆண்டவிடந்தானோ = சீவத்துவரூபமாயுள்ள என்னைத் துரிய வடிவ குருமூர்த்தமாய் தன்னில் அபேதமாக்கி கொண்ட கேவல நிலையோ! பொருள் ஆவது = உண்மை நிலையாவது!

விசேட உரை :—ஓகார மென்னிடைச் சொல்லாகக் கோடலே சிறப்பென்க; இதனை ஐயமெனக் கோடலத் துணைச் சிறப்பன்றென்க. என்னுயிர் என்புழி உடையானு முடைமையும் வேறன்றாய ஆறுவதனொற்றுமைப் பொருட்கண் வருதலின் யானெனற் குயிரெனப் பொருள் கூறினும்; யானெனற்கு வேறுரைப்பாருமுளர். 'பொருள்' என்றல் உண்மை என்றும்; இதனைப் "பொருள்சேர் புகழ் புரிந்தார்" என்பதற்கு பரிமேலழகர் கூறியவாற்றானு முணர்க. வேதமுதலியனவும் ஐவகையாய மெய்வகைப் பூதங்களுமிறைவனது வடிவ மென்றலின், வானோ புனல்பார் கனன்மாருதமோ' என்றார்.

'சண்முகன்' எனற்குக் காப்பு செய்யுளிலுரைத்தாங் குணர்க. 'பொருளாவது' என்புழி ஆவதென்பது எழுவாய்ச் சொல்லுருபெனக் கூறுவாறு முளராலோ வெனின், உருபின்மே லுருபிடைச் சொற்பெய்து முடித்த றெல்லோர் மரபன்றாகலி னவர்க்கது கருத்தன் றென்க. இனி வினையிலக்கணையாகிய அவ்வினைப் பெயரெனக் கோடலே மிகச்சிறப்பென்க.

4. வளைபட்ட கைமா தொடுமக் களெனும்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியும்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே.

நீலகண்டீய உரை விளக்கம் :— வளை பட்ட கை மாதொடு மக்கள் எனும் தளைபட்டு=வளையல்களை யணிந்த கரங்களையுடைய மாதர்களொடு மக்கள் என்கின்ற பந்தத்தில் அகப்பட்டு! அழியத்தகுமோ=கெட்டொழிதல் தகுதியுடையதாகுமோ! இது தகுதியுடைய் தாகுமோ! கிளைபட்டு எழுசூர் உரமும் கிரியும்=கிளைக்கா நின்றெழுகின்ற சூரபன்மனது வன்மையையும் கிரௌஞ்ச மலையினையும்! தொளைபட்டு உருவத்தொடு வேலவனே = தொளைபட்டு ஊடுருவும்படி வேற்படையைப் பிரயோகம் செய்த பெருமானே!

விசேட உரை :—கொடிச் சேவலனென்பது சேவற் கொடியனென விகுதி பிரித்துக் கூட்டியுரைத்தாற் போலுந் 'தொடுவேலவன்' என்றதையும் விகுதி பிரித்துக் கூட்டியுரைக்க 'தகுமோ' என்ற வடுக்கு இரக்கப் பொருட்டு, மக்கள்—பன்மையே குறித்து வருபெயர்; மாந்தரென்பது மது. 'கிளை' என்றது சிங்கமுகாசுரன் தாருகனாதிய தம்பியரையும், பானுகோபன் முதலாய குமாரரையுமென்க. 'சூர்' என்றது சொல்லளவில்

அஃறிணைப் பெயர். 'கிரௌஞ்சம்' என்றது சந்தனப் பொதியிற்செந்தமிழ் முனிவனுய அகத்தியனுர் அவாசிக் கட் போந்துழியோரவுணனன்றில் வடிவாய கிரௌஞ்ச மலையாய்த் தோன்றவதனை யாருய்ப்புக்குழி யஃது மலை வைத்தரவதனுற் பிள்ளையார் வருகாரு மசலமாக நிற்க வெனச் சபித்தனராக, அதனுனன்றே, பிள்ளையாரு மிங் குற்றதனை வேற்படையாற் றடிந்தமை என்க இங்ஙனங் கருதியன்றே.

''தாருகனு மாயத் தடங்கிரியுந் தூளாக''

எனவும்,

'பானு பகைவன் முதலாய பாலருடன் சிங்கமுகனை'

எனவும்,

'சூருடலங் கீண்ட சுடர் வேலோய்'

எனவும்.

பிறருங் கூறுயதூஉமென்க 'சூருரம்' எனற்குத் தாருக னுரமென்பாருமுளர்; அது சூரன் வேறு, தாருகன் வேறென உணராதார் கூற்றென்க.

5. மகமா யைகளைந் திடவல்ல பிரான்
முகமாறு மொழிந் துமொழிந்திலனே
அகமா டைமடந் தையரென் றபரும்
சகமா யையுள் நின் றுத யங்குவதே.

நீலகண்டீய உரை விளக்கம் :— மகமாயை களைந்திட வல்லபிரான் = பிரகிருதியாகிய மகத்தத்துவ மென்னும் தத்துவத்தையும் அதன் காரியமாகிய மாயையினையும் (உண்மை ஞானத்தால்) ஒழிக்க வல்ல பெருமான்! முகமாறு மொழிந்தும் = நிரதிசயானந்த பரிபூரணமாயுள்ள உண்மை நிலையை அருளிச் செய்தும்! அகம் ஆடை மடந்தையர் என்று = அந்நிலையில் நிலைபெருது வெளிமுகமாயுள்ள என் வீடு என் ஆடை இது எனது

மங்கையர் என்று! அயரும் சகமாயையுள் நின்று தயங்குவது = துன்பவடிவமாயுள்ள சகசீவபரமென்னும் இவற்றில் நிலைபெற்றுக் கிலேசமடைதலை! ஒழிந்திலன் = விட்டு நீங்கிலேன்!

விசேட உரை:—மகமாயை = என்றது மகத்தாகிய மூலப் பிரகிருதி! மூலம் = கரணம்! பிர = சத்துவம்! கிரு = இரசசு! தி = தமசு என்று சகசீவபரங்கட்குக் காரணமாகிய மூன்று குணங்களையுடையது. சத்துவம் = சுத்தமாயையாம் அதிற் பிரதிபித்த பரம்பொருளே = மாயாப் பிரதி பிம்ப ஈசுரன் ஆம் இரசசில் (அவித்தையிற்) பிரதி பிம்பித்த பரம்பொருளே அவித்தியாப் பிரதிபிம்ப வடிவ சீவர்களாம் தமசில் = நாமரூபமாயுள்ள சடவடிவ உலகமுமாம் ஆதலால் இம்முக்குணங்களின் வடிவமாயுள்ள பிரகிருதியும் கயிற்றிற்றேன்றும் அரவானது கயிற்றிற்கு வேருகப் பொய்மையாய்த் தோற்றி விசாரித்தால் அக்கற்பித வடிவமாய்த் தோன்றிய அரவானது வாஸ்தவ வடிவமாயுள்ள கயிற்றிற்கு வேருகாது அக்கயிறேயானதுபோன்று! அப்பரம்பொருளில் பொய்மையாய்த்தோன்றிய சகசீவபரங்களை மூலப்பிரகிருதியானது கற்பிதமாக மாயாவியினது சன்னிதியில் அவனது சால சக்தி தோற்றுவித்து மீண்டுந் தோன்றியவாறே ஒன்றில் ஒன்றை ஒடுக்கித் தானும் மாயாவியினது சொரூபமாகவே இருந்தது போன்று! மூலப் பிரகிருதியும் அகண்ட பரிபூரண வடிவமாயுள்ள ஆத்ம சொரூபமாகவேயுள்ளது என்று அறியவும்! அதற்குதாரணம்:

'வரைவுதரு சித்திரிகன் சித்திரசத்தியைப்போல்
மாயையும் சின்மாத்திரமாம் பிரஹ்மத்தின் வேருய்த்
தெரிவதிலாமையின் என்றும் சச்சிதானந்த சிவத்தினுக்கு
விசாதியிலை யென்றுணர்க தெரிந்தே.

கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்-630 307

6. திணியான மனோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந்த மரும்பு மதோ
பணியா வெனவள் ளிபதம் பணியும்
தணியா வதிமோக தயா பரனே!

நீலகண்டிய உரை விளக்கம் :—திணியான மனோ சிலை =மிகத்திண்ணிதான மனமாகிய கல்லின்மேல்! உனதாள் அணி ஆர் அரவிந்தம்=உண்மை அறிவானந்த வடிவமாயுள்ளதும் உனது நிரதிசய வின்பமாயுள்ளதும் அழகார்ந்த தாமரை மலர் போன்றதுமாயுள்ள் திருவடி மலர்கள்! அரும்புமதோ=விளக்கம் ஏற்படுமோ! பணியாவென=இதுபோது யான் செய்யத் தக்க பணியாதென்று. வள்ளிபதம் பணியும் = வள்ளியம்மையின் பாதங்களை வணங்கும்! தணியா அதிமோகதயாபரனே = தணியாத மிக்க மோகத்தையுடைய கிருபைக் கடலையாயுள்ள மேலோனே.

விசேட உரை :—'மனோசிலை' இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூல் முடிபு.

''கன்னா ருரித்தென்ன வென்னையுந்தன் கருணையினால்''

எனப் பிறருங் கூறினாராகலின், 'திணியானம னோ சிலை மீதுனதா, ளணியா ரரவிந் தமரும் புமதோ', என்றார்; என்றாரேனும் குறிஞ்சித்திணைக்கண் தாமரையாய மருதக் கருப்பொருடோன்றாதேனும் எல்லாம் வல்ல பிள்ளையார் பால் மெய்ந்நிலையாய செந்நெறி பெற்றிருக்குநராகலின், மனோலயம் பெற்றமையுமிதன் முன்னின்மையும் கருதி ''மனோசிலைமீதுனதாள்'' 'அரவிந்தமரும்புமதோ' என்றார். இனி 'பணியான வள்ளிபதம் பணியுந்! தணியா' எனப்பாட மோதிப் பணியத்தகாதவனப் பினை வாய்ந்த வள்ளி நாயகியாரது பாதம் பணியா

நின்ற தணிகாசலனே! என்றுரை விரிப்பாருமுளர்! அஃதேல்,

"கலாமயிற் கூத்தையர் குளிர்ப்புன மொய்த்திட்ட
[சாரலிற் போய்ச்
சிறுகுறவர் மகட்குச் சலாமிடற் கேக்குறு குமரனை"

எனப் பிறருங் கூறுதலா னஃது பாடமன்மை தெளிக! இங்குப் பணிதலைக் கந்தபுராணத்துள் வள்ளி நாச்சியார் திருமணப் படலத்துப் பரக்கக் காண்க.

7. கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதாணினைவாய்
சுடுவாய் நெடுவேதனை தூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே!

**நீலகண்டீய உரை விளக்கம்:**—மனனே = மனமே. கதிகேள் = நீ இன்று உய்வடையும் நெறியைக் கேட்பாயாக (அஃது யாது எனின்) கரவாது இடுவாய் = உள்ளதை ஒழிக்காமற் கேட்பவருக்கு நீ கொடுப்பாயாக வடிவேல் இறைதாள் நினைவாய் = வடிவேற்படையைத் திருக்கரத்தினில் ஏந்திய! பிள்ளையாரது நிரதிசயானந்தவடிவமாயுள்ள திருவடிகளையே சிந்திப்பாய்! நெடுவேதனை தூள் பட = சிருஷ்டி முதல் இதுவரை தொடர்ந்துள்ள பிறவித்துன்பங்கள் பொடிபடும் வண்ணம்! சுடுவாய் = உண்மை ஞானமென்னும் நெருப்பால் சுட்டுயெரிப்பாய்! வினையாவையும் விடுவாய் விடுவாய் = நல்வினை தீவினைகளை முழுவதும் (அவை பிறப்பிற் கேதுவாதலின்) அவை முழுவதும் விட்டு நீங்குவாய்!

விசேட உரை:—'கெடுவாய்' என்றது இரக்கக் குறிப்புச் சொல் கெடுவா யெனற்குக் 'கேடு வாய்ந்து என்பாருமுளர்; அற்றேல் கெடு என்பது முதனிலைத் தொழிற் பெயர் சுடுத லீண்டுக் கெடுதலை, வேதனை

நீடலின் 'நெடுவேதனை' என்றார். துகள் 'தூள்' என மரீஇயது, 'விடுவாய்' என்ற அடுக்கு விரைவுப் பொருட்டு, 'வினை' எனவே நல்வினை தீவினைகளடங் குமேனும் யாவையு மென்றமையானவ்விரண்டனையு மென்க.

8. அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப்பொருள் பேசியவா!
குமரன் கிரிராச குமாரி மகன்
சமரம் பொருதா னவநா சகனே!

நீலகண்டீய உரை விளக்கம் :—குமரன்=குமாரக் கடவுளும்! கிரிராச குமாரி மகன்=பர்வத இராச புத்திரியாராகியஉமையம்மையின்புதல்வரும்! சமரம் பொருதானவ =நாசகன்போர் புரியும் அவுணர் குலத்தைத் தொலைப் பவரும் ஆகிய பெருமான்! அமரும்பதி கேள்=யான் வாழா நின்ற ஊரும்! சுற்றமும்! அகமாம் எனும்=வீடும் என்று என்னும்! இப்பி மரங்கெட=இந்த அறியாமை கெட்டொழிய! மெய்ப்பொருள் =உண்மை ஞானத்தினை! பேசியவாறு=உபதேசம் செய்தருளிய விதம் இது என்ன வியப்பு!

விசேட உரை :—என்னெனப்ப தெஞ்சி நின்றது, பேசியவாறு, என்புழி=று தொகுத்தல் ஆம்! ஆல்= அசை. தானவன் என்றது காசிப முனிவர் மனைவி யருட்டனுவென்பாண் மக்களை முருகவேள் ஞான ஆசிரியராகலின்! "மெய்ப்பொருள் பேசியவாறு என் றார் என்னை! உண்மை ஞானத்தால் அறியாமை என் கின்ற இருள் கெட்டொழிந்தாலல்லது நிரதிசயானந்த வடிவமாயுள்ள சூரியன் றோன்றுவாகலின்! மெய்ப் பொருள் என்புழி இரண்டனுருபும், பிரிநிலையேகாரமும் விகாரத்தாற் றொக்கன.

9. மட்டுர் குழல்மங் கையர்மை யல்வலைப்
பட்டு சல்படும் படரென் றொழிவேன்
தட்டு டறவேல் சைலத் தெறியும்
நிட்டு ரநிரா கு லநிர்ப் பயனே!

நீலகண்டீய உரை விளக்கம் :—தட்டு ஊடு அற= தடையானது பிணங்குதலின்றி நீங்கும்படி! வேல் சைலத்து எறியும்=வேற்படையினை கிரௌஞ்சகிரியின் மீதேவுகின்ற! நிட்டூர=மிக்க கோபத்தையுடையவனே! நிராகுல = நிரதிசயவின்பமே சொரூபமாகலின் யாதொரு வருத்தமில்லாதவனே! நிர்ப்பயனே = எல்லாந் தன்வடிவமாயுள்ளவன் ஆதலின் யாதொரு அச்சமில்லாதவனே! மட்டு ஊர் குழல் மங்கையர்= மலர் நிரம்பிய கூந்தலையுடைய மடந்தையரது! மையல் வலைப்பட்டு=மயக்கமாகிய வலையுட் பட்டு! ஊசல்படும் படர்=ஊஞ்சலைப் போலும் மாறி மாறி வரும் இன்ப துன்பங்களினின்றும்! என்று ஒழிவேன்=எக்காலத்தில் இதனின்றும் விடுபடுவேன்!

விசேட உரை :—ஆகுபெயர், சைலம் என்றது கிரௌஞ்சத்தை! வேல் சைலத் தெறிந்தமையை வளை பட்டகை என்னும் செய்யுட்கண் கிரியும் தொளை பட்டுருவ. என்றதற்கு உரைத்தாங்கு ஓர்ந்துணர்க! மையல் வலை=இருபெயர் ஒட்டுப்பண்புத் தொகை! உண்மை ஞானத்தால் இம்மையல் ஒழிந்தாலல்லது மல விட்சேபதோஷமின்றிய மனத்திற்கேயன்றி மலவிக்ஷேப தோஷங்களோடு கூடிய மனத்திற்கும் இலக்கணை விருத்திக்கேயன்றி வாக்கிய விருத்திக்கும் எட்டாத நிலைமைத் தாய அந்தமில் இன்பத்து அழிவில் வீடெய்துதல் அரி தாகலின் அன்றே! ஊசல்படும் படர் என்றொழிவே னென்றார்!

10. கார் மாமிசை காலன் வரிற் கலபத்(து)
ஏர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மா ர்பவலாரி தலாரி யெனும்
சூர்மா மடியத் தொடு வேலவனே!

நீலகண்டீய உரை விளக்கம் :--கார்மா மிசை = எருமைக் கடாவின் மேல்! காலன் வரில் = தென்றிசைக் கடவுள் வந்தால்! கலபத்து ஏர்மாமிசை = தோகையை உடைய அழகிய மயிலின் மீது! வந்து எதிரப்படுவாய் = நீ எனக்கு எதிரே வந்து தோன்றுவாய்! தார்மார்ப = மலர் மாலையணிந்த மார்பினையுடையவனே! வலாரிதல அரியெனும் = இந்திரனது உலகிற்குப் பகைவனாகிய! சூர்மா = மாமர வடிவமான சூரபதுமன்! மடியத்தொடு வேலவனே = மடியும்படி வேற்படையைப் பிரயோகித் தவனே!

-

விசேட உரை :—எருமைக்கடா மிகக்கரியதாகலின் 'கார்மா' என்றார். இங்குரைத்தவாறே! 'கந்தர் அலங் காரத்தில்' பட்டிக் கடாவில் வரும் அந்தகா என்றுங் கூறியுள்ளார்! மலர் மாலை = இங்கு கடப்ப மாலையை! அதனையே முருகப்பெருமான் விரும்பியணிதலின்! அது பற்றியே கடம்பன் என்றொரு நாமமும் உண்டு என் றுணர்க! காலன் இக்கடாவின் மீதூர்ந்து வந்தே உயிர் களைக் கவர்ந்து செல்வன் ஆகலின் 'வரின்' என்றார்! அதுபோது நீ மயிலின் மிசை வந்து தோன்றினாலல் லது பிழைப்பதரிதாகலின்!வந்தெதிரப்படுவாய் என்றார்! வந்து எதிர என்பதையும்! தொடு வேலவன் என்பதை யும்! எதிர்வந்து எனவும்! வேல்தொட்டவனே என்பதை விகுதி பிரித்துக் கூட்டியுரைக்க! கலாபம் என்றது. திரிந்து நின்றது! வலாரி என்றது! இந்திரனே! அவன் வலன் என்னும் ஓர் அசுரனைக் கொன்றதால்! மாமர

மாகக் கடைப்போர் பொருதலின்! சூரைச் சூர்மா என்ருர்! இதனைக்

"கவிழ் இணர் மாமுதல்
வாரிதனிற் புதிய மாவாய்க் கிடந்த நெடுஞ்சூர்"

எனவும் பிறருங் கூறியுள்ளார்!

11. கூகா வெனவென் கிளை கூடியழப்
போகா வகைமெய் பொருள் பேசியவா
நாகாசல வேலவ நாலு கவித்
தியாகா சுரலோக சிகாமணியே!

நீலகண்டீய உரை விளக்கம்:—கூகாவென = கூகா வென்னும் ஓசையுடனே! என் கிளை கூடி அழப்போகா வகை=என்னுடைய சுற்றத்தினர் சூழ்ந்து அறற்ருத விதமாக! மெய்ப்பொருள் பேசியவா=உண்மை அறிவானந்த வடிமாயுள்ள உண்மைப் பொருளை! உண்மை ஞானத்தால் உபதேசம் செய்தருளிய தன்மை இஃதென்ன வியப்போ! நாகாசலவேலவ=திருவேங்கட மலையில் எழுந்தருளிய வேற்படையையுடையவனே! நாலுகவித்தியாகா=நான்கு விதமான கவிதைகளைப் பாடுநர்க்கு அருள்பவனே! சுரலோக சிகாமணியே= விண்ணுலகினர்க்கு முடிமேலணியும் பொள்ளாமணி போன்றவனே!

விசேட உரை:— கூகாவென்ப தொலிக் குறிப்பு! கிளை =ஆகுபெயர் நாகாசலமென்றது, திருச்செங்கோடு எனினுமாம்! நாலுகவி=ஆசு! மதுரம்! சித்திரம் வித்தாரமென்பன! நாலுகவித்தியாகா என்பதற்கு நாலு கவிதைகளையும் பாடுமாறு. சிகாழியின்கண் அந்தணர் குலத்தில் கௌணிய கோத்திரத்தில் திருவவதாரம் செய்தருளிய பிள்ளையாரே என்றும் பொருள் கொள்ளலாம். இதனை,

''காழியிலே வந்து கணக்கிலாச் சீவரை நீ
டூழி இன்பத்துய்த்த ஒருவனே''

எனவும் பிறருங் கூறியுள்ளார்! இந்திரனை அவனிழந்த பெரும்பதம் மீண்டும் பெறுமாறு செய்தமையின் பெருமானைச் சுரலோக சிகாமணியே என்றார்.

12. செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இரு சொல்அற வென்ற லுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே!

நீலகண்டீய உரை விளக்கம் :—செம்மான் மகளை = செம்மையான மானினது மகளாராகிய வள்ளி நாச்சியாரை! திருடுந்திருடன் = களவு செய்த கள்வன்! பெம்மான் = எமது பெருமான்! முருகன் = மாறாத இளமையுடையவன்! பிறவான் = உற்பத்தி இல்லாதவன்! இறவான் = என்றும் நாசம் இல்லாதவன்! சொல் அற = வாக் மௌனம் அதன் சார்பாய காஷ்ட மௌனம்! கரண மௌனம் மனோமௌனம் ஆகிய இவைகளைப் பொருந்தி! சும்மா இரு என்றலும் = நனவிற் சுழுத்தி நிலையுற்று கேவலாவத்தையாகிய துரிய வடிவத்தில் நிலைபெற்று! இத்துரிய வடிவமாயுள்ள ஆத்மாவே நான் என்ற நினைப்பும் உறங்கினவன் கைப்பதார்த்தம் போல் நழுவ விட்டுக் கர்மகர்த்துரு பாவங்கழன்ற அநுபவத்திருந்து அதனையறிவாய் எனக்கூறவும்! அம்மாபொருள் ஒன்றும் அறிந்திலனே = அம்மாட்சிமையான நிரதிசயானந்த வடிவமாயுள்ள ஆத்ம சொரூபத்தையன்றி அதற்கயலாகச் சகசீவபரங்களாயுள்ள நாமரூபமாகிய இவைகள் யாவையும் ஒரு சிறிதுமே அறியகில்லேன்!

விசேட உரை :—செம்மான் மகளைத் திருடுந்திருடன் என்றது! சிவமுனிவரது தெய்வப்புணர்ச்சியால் அங்குச்

சென்ற மானை நோக்க! அஃது கருவுற்றுத் தொண்டை வள நாட்டு வள்ளிமலைச் சாரலிற் குழந்தையையின்று செல்ல அதனை வேடர் மன்னன் எடுத்து வளர்த்துழிப் பிள்ளையார் எய்திக் கைக்கொடு சென்றமையை இதனைக் கந்தப் புராணத்தில் வள்ளியம்மை திருமணப் படலத்துட்காண்க! செம்மான் மகள்! "சிறந்த மானினது மகளார் என்றும் பொருள் கொள்வாருமுளர்! சும்மா இரு சொல்அற என்றது! அதற்கு உதாரணம்:

" வினவிற் பரத்தை அறிவுறுதற்கு
அவத்தை புலன் வினைமாறியே
நனவிற் சுழுத்திநிலைவரின்
அப்பொருள் திகழும் நலமாகவே!

அதற்குதாரணம் கந்தபுராணம்!

"அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்
பிரஹ்மமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகிக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டுங்
[கொண்டே
ஒருதிருமுருகன் வந்தாங் குதித்தனன் உலகம் உய்ய"

என்றும்,

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
ஆறங்க முதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப்பாலாய்
எல்லாமா யல்லதுமாயிருந்த தனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்"

என்றும் கூறும் திருவிளையாடல் கந்தப்புராணம் முதலிய நூல்களிற் றுதிகளிற் காணப்பட்டுள்ளது!

செம்மான் என்றது இனமின்றிச் செய்யுளில் வந்த கருமதாரயனென்க! அம்மா இது என்னவியப்பு! எனப் பொருள் கூறுவதும் ஒன்று! ஒன்று என்பது துவித விலக்கும் அத்வைதமான பரம் பொருள் எங்கும் நீக்கமற நிறைந்து பரிபூரணபரமானந்த வடிவமாயுள்ள ஆத்மாவேயன்றி அதற்கயலாயது யாதுமின்றெனக் கூறியதாம்! அறிந்திலன் என்பது, இறந்தகால வெதிர்மறை வினை முற்று! அறிகின்றிலன் என, நிகழ்காலம் என்பதன்றி எதிர் காலமேற்று வந்திலது. ஒன்றும் என்னும் உம்மை தேற்றத்தில் வந்தது. முற்றுப்பொருளோடு இழிவு சிறப்புப் பொருட்டு, என்றும் பிறநூல்கள் கூறும் இதனையே திருமூலரும்:

"உரையற்ற தொன்றை உரைசெயும் ஊமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாணலாகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற்றிருந்தான் புரிசடையோனே!

எனவும் அம்மாபொருள் ஒன்றும் அறிந்திலனே! என்பதற்குதாரணம்:

"மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்

என்றும் கூறியுள்ளார்!

இச்சகசீவபரங்கள்! நாமமும் ரூபமும் உண்மை அறிவு, ஆனந்தம் (இருப்பு விளக்கம் பிரியம்) என்னும் ஐந்து அம்சங்களில் நாமரூபங்களாயுள்ளது சகசீவபரம்! இருப்பு விளக்கம் பிரியம் மூன்றும் ஆன்ம

Acc. No: 1173
Δ2, 11

சொரூபமாயுள்ளது நாமரூபங்கள் தோன்ற! இருப்பு விளக்கம், பிரியம், என்பது தோன்றமாட்டாது! நாமரூபங்களை நீக்கின் அவை மூன்றும் விளங்குமாகலின்! உண்மை அறிவானந்த சொரூபத்தில் நிலைத்துப் பார்க்க சகசீவ பரங்களாயுள்ள நாமரூபங்கள் எவையும் தோன்ருதிருத்தலின் அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே என்ருர்! இது கந்தர் அநுபூதி பெற்று கந்தரநுபூதி சொன்ன எந்தை அருணகிரியார்! நமது அநுபவமுங்காண்பாம்! நனவினிற் கண்ட இவைகள் யாவும் கனவில் இல்லை! கனவிற் கண்டவைகள் யாவும் நனவில் இல்லை! நனவு கனவென்னும் சகலாவத்தையிற் கண்டது கேவலாவத்தையாகிய சுழுத்தியிற் கண்டிலேம்! இச்சகல கேவலங்கள் கடந்த துரியாவத்தையிற் துரிய வடிவமாயுள்ளகூடஸ்தனுகிய ஆத்மாவையே அல்லது அதற்கயலாக யாம் யாதும் கண்டிலேம்! சகல கேவலங்களில் இவை எல்லாமாயும் இருந்தது அவை கடந்த கேவலாவத்தையில் யாதும் இல்லாது உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆன்மாவும் அதனை யாசிரயத்துள்ள அவித்தையுமாய் உள்ளது. அந்த அவித்தையும் உண்மை ஞானத்தாற் கெடின் துரியவடிவமாயுள்ள கூடஸ்தனுகிய ஆன்மாவே எஞ்சி நிற்கும் என்றுணர்க!

13. முருகன் தனிவேல் முனிநங் குருவென்(று)
அருள் கொண்டறியார் அறியுந்தரமோ!
உருவன் றருவன் றுளதன் றிலதன்(று)
இருளன் றொளியன் றெனநின் றதுவே!

நீலகண்டிய உரை விளக்கம்:—உருவன்று = சகசீவ பரமாயுள்ள நாமரூபங்களுமன்று! அருவன்று = அவற்றிற்குக் காரணமாயுள்ள மாயையும் அன்று! உளது

அன்று = சத்தும் அன்று! இலது அன்று மலடிமகன் மருடக்கொம்பு முதலியன போன்றுள்ள அசத்துமன்று! இருள் அன்று = அஞ்ஞானமுமன்று! ஒளியன்று = ஞானமுமன்று! என = என்று வேதங்களும் சொல்ல நின் றதுவே = நின்ற தனது நிரதிசயானந்த வடிவமாயுள்ள உண்மை நிலையை! முருகன் = மாருத இளமையுடையான்' தனிவேல் முனி = ஒப்புயர் விகந்த வேற்படையை திருக் கரத்திலேந்திய மனனசீலன்! நம் குரு என்று = நமது ஞானசிரியனென்று சொல்லி! அருள் கொண்டு = அவனது உண்மை ஞானத்தையடைந்து அதனை அநு பவ ரூபமாயறியாதவர்! (அப்பொருளை) அறியுந்தரமோ = வேறே கர்மோபாசனைகளால் அறியும் பான்மையதோ அஃதன்று!

விசேட உரை:—உருவன்று அரு அன்று என்றது சீவேஸ்வர சகத்தாயுள்ள நாமரூபங்களும் அதற்குக் காரணமாயுள்ள மாயையும் அப் பரம்பொருளன்று. இந்திர சாலிகனுகிய மாயாவி! தன்னிற்ருேற்றுவித்த பொருள்களும் நாமரூப வடிவமாயுள்ள அப்பொருள் களுக்குக் காரணமாயுள்ள அவனது சாலசக்தியும் அவ னிற்ருேன்றி அம்மாயாவிக்குவேருகாமல் அவன் வடிவ மாகவேஉள்ளன, அதுபோன்று ஈசுரனுகிய மாயாவியால் தோற்றுவித்த அவனது சத்தியும் அவற்ருல் தோற்று வித்த நாமரூப சகித உலகமும் அவனுக்கு வேருகவோ இல்லை. கடலின் கண் உண்டாம் அலை திவலை குமிழி கள்யாவும் அவற்றிற்கு வேருக இல்லை. கடல் வடிவமே யாதல் போல நாமரூபமாயுள்ள சகசீவ பரங்கள் பெரி துக்கெல்லாம் பெரிதாயுள்ள நிரதிசயானந்தப் பெருங் கடலில் அலைதிவலை குமிழிகள் போற்ருேன்றி மீண்டும் அந்த வடிவமாகவே யாகும்! என்பதற்குதாரணம்!

"அறியும் பொருளன் றறியாப் பொருளன்(று)
அறிவாகிய நீயெனும் அப்பொருள்தான்.
பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக்கண் விழித்தறியும் பொருளே!"

என்றும்,

"அறியாப் பொருள் காரணமாயை குறித்து
அறியும் பொருள் காரியமாம் உலகிந்
நெறியாற்றிகழ் நான் மறை அந்தமெலாம்
நீயன்றென வோதும் நிரந்தரமே"

என்றும் கூருநிற்கும் உருவன்று......ஒளியன்றென நின்றதுவே என்பதற்குதாரணம்!

"யாதும் என்றும் எவ்விடத்தும் இறத்தல் பிறத்தல் இலதாகும்! ஓதும் விவர்த்த ரூபத்தால் உலகாய்ப் பிரஹ்மமே வளரும்! ஆதலால் இவ்வுலகெல்லாம் அடியுமுடியும் நடுவும் அறப்பேத மறப்பாவா பாவம் பிறவாப்பொருள் என்றிடர் தீர்வாய்! என்றும் வாசிட்ட முதலிய நூல்கள் கூறும்!

நம் குருவென்று அருள் கொண்டு அறியார் அறியுந் தரமோ என்பதற்குதாரணம்,

மைப்படிந்த கண்ணாளுந் தானும் கச்சி
மயானத்தான்வார் சடையான் என்னினல்லால்
ஒப்புடையனல்லன் ஒருவனல்லன் ஒரூரனல்லன்
ஓர் உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே.

என்று சொல்மன்னரும் கூறியுள்ளார்கள் ஒளியன்றென நின்றது. அச்சொரூபத்திற்குச் சாமானியம் விசேட மென இரண்டு அம்சங்கள் உள்ளன. அவை அக்கினி யானது! சாமானிய அக்கினி நீரின் கண்ணும் வியாபித் துள்ளது. அதனது விசேட அம்சம் இரண்டு மரங்கள் ஒன்றோடொன்று உருய்தலினுல் எழும் அக்கினியானது விசேட அம்சமாகும்; இவை தோன்றும் மீண்டு மறை யும்! சாமான்ய அம்சம் என்றும் ஒருதன்மையாயுள் ளன! என்பதற்குதாரணம்! தேவாரம்!

''விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச்சோதியான்
உறவு கோல் நட்டு உணர்வுக் கயிற்றினுல்
முறுகவாங்கிக் கடைய முன்னிற்குமே!

என்றும் கூறுவனவாகலான் அப்பரம் பொருள்! சித் வெளியாய் (சிதாகாய வடிவமாய்) நீக்கமற எங்கணும் பரிபூரண பரமானந்த சொரூபமாயுள்ளதுவே சாமான்ய அம்சமாம். நம் வாதவூரடிகள் முதலிய சிட்டர் களினிமித்தம் அவயவ சகிதமாய் வெளித்தோன்றி அநுக்கிரகித்து மீண்டும் சாமான்யத்தில் லயமாம் சாமான்ய வடிவமாயுள்ளதும் நிரதிசயானந்த வடிவமா யுள்ளதும் சித்வெளியாயுள்ளதும் உண்மை அறிவா னந்த வடிவமாயுள்ளதுமாகிய அதுவே ஆத்மாவென, உண்மை ஞானத்தால் அறிந்து அதில் நிலைபெற்று நிற்றலே முத்தியும் ஆகுமாகலான்! அவனருள் கொண் டறியார் அறியுந்தரமோ! என்றூர் அடிகள்! இந்நிலையே நான்கு வேதங்களும் ஒரு சமநிலை சொலும் நிலையாத லின் இதனின் மிக்கதில்லை என்பார் அருள் கொண்டு அறியார் அறியுந்தரமோ! என்றதற்குதாரணம்! பத்தி சதகம்!

''புகலரும் பரப்பிரஹ்மமாங்கடல் தனிற்
புணர் பரைத்திரையீசன்!
சகமோடாருயிர் எனுநுரையாதிகள்
தந்துமாற்றிடு மென்றே
பகரும் நான்மறை எனில் அதில் எதை
எதைப்பற்றுவாம் விடுகிற்பாம்
சுகசொரூபமே அனைத்துமென் றகற்றுதி
துவிதபாவனை நெஞ்சே!

என்றார் பிறரும். நங்குரு என்றது தமக்கு மாத்திரமே யன்றி அகத்தியனார்க்கும் சிவபெருமானுக்கும் பராசரர் புதல்வர்கள் அறுவர்க்கும் உண்மை நிலையை உணர்த்தினமையை நோக்கியே இதனை,

''குறுமுனி தேற நெடுமறை விரித்தோய்''

என்பதனானும்,

''உழன்மதிற் சுட்ட தழனகைப் பெருமான்
வணங்கி நின்றேத்தக் குருமொழி வைத்தோய்!''

என்பதனானுமுணர்க!

14, கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்(று)
உய்வாய் மனமே யொழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழிநா சியொடுஞ் செவியாம்
ஐவாய் வழிசெல்லும் அவாவி னையே!

நீலகண்டீய உரை விளக்கம்:—கைவாய் கதிர்வேல்= திருக்கரத்தின் கண் ஒளியமைந்த வேற்படையை யேந்திய பெருமான்! முருகன் = இளமை நீங்காத பெருமானது! கழல் பெற்று = உண்மை ஞான வடிவமாயுள்ள திருவடிகளை தெப்பமாகப் பற்றி! மனனே = எனது நெஞ்சகமே! உய்வாய்=பரமானந்த வடிவமாயுள்ள கரையைச் சேர்வாய்! மெய்வாய் விழி நாசியொடும் செவியாம்=மெய்வாய் கண் மூக்குக் காதென்கின்ற!

ஐவாய் வழிசெல்லும் அவாவினையே=ஐந்து பொறிகளின் வழிச்செல்லும் ஐந்துவித அவாவினையும் ஒழிவாய், ஒழிவாய்=ஐந்து புலன்களால் நுகரும் விடயங்களிலுள்ள தோஷ திருஷ்டியால் அவற்றினைக் கெடுப்பாய்!

விசேட உரை:—பிறவிக் கடலைக் கடந்து முத்தியங் கரைசேர்ந்து அயர்வு நீங்கி இளைப்பாறும் இடத்தையடைய விரும்புவோர்கள் அவனது உண்மை ஞான வடிவமாயுள்ள அவனது திருவடிகளையே தெப்பமாகப் பற்றிக் கொள்ளும் நெறியாவது! நித்திய அநித்திய வஸ்துக்களின் விசார வடிவமாயுள்ள விவேகத்தால் ஆசையை ஒழிக்கலாம்! 'எங்ஙனமெனின்' மாயாவியினால் காட்டிய பொருள்கள் பொய்மையே என்றுணர்வதால் அதில் யாவர்க்கும் இச்சையுண்டாவதில்லை அது போன்று பரம்பொருள் ஒன்றே உண்மைப் பொருளாம்! காணப்பட்ட இச்சடப் பிரபஞ்சம் பொய்மையாயுள்ளதே எனவும் விசாரம் செய்தால் பொய்மையில் விழைவுண்டாகமாட்டாது அதுவே அதற்குபாயமாம் இதனையே,

"அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு!" எனவும்

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்டவரும்" எனவும்

"பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு"

எனவும், உம்பரும் பரவும் ஒரு தமிழ் வேதமுரைக்கும்.

பறவைகளைக் கொல்ல விரும்பிய வேடனொருவன் மரத்தின் மீதுள்ள பறவையை இலக்ஷியமாக் கொண்டு ஐந்து புலன்களும் மனமும் ஒருமையுற்று தான் லக்ஷியத்

தில் வில்லின்கண் அம்பின் பிரயோகம் செய்வன். அதுபோன்றுஆன்ம வடிவமாயுள்ளலக்ஷியத்தையடைய விரும்பினோது மனதும் ஐந்து புலன்களும் ஒருமையுற்று உள்ளமாகிய வில்லின்கண் உண்மை ஞானமென்னும் அம்பினைச் செலுத்தல் தகுதி என்று உயர்ந்தவர் போற்றும் தெத்தாத்திரேயர் பாகவதம் ஆசாரியரை உரைத்தஅத்தியாயத்தில் கூறியுள்ளார்கள்! உருவன்று! அருவன்று என்றமையின்! சகசீவபரமாகிய நாமரூபவடிவமாயுள்ள காரியங்கட்குக் காரணமான மாயையும் ஆன்மா அன்று இவைகட்கு திருஷ்டாவாயுள்ள உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆன்மாவினது சொரூபம் இவற்றிற்கு ஆதாரமாயுள்ளதெனக் குறிப்பித்துள்ளது! உளதன்று இலதன்று என்றமையால் சதசத்வி லக்ஷணபாவ பதார்த்தமென (அதாவது சத்துக்கும் அசத்துக்கும் வேருகவே உள்ளது சிதாகாய வடிவம் என்பதுகுறிப்பித்தது. இருளன்று! ஒளியன்றுஎன்றமையால் ஆத்மாவானது அஞ்ஞானத்திற்கும் அதன் அபாவ வடிவமாயுள்ள ஞானத்திற்கும் வேருயுள்ளது எனக்குறிப்பித்தது அதாவது ஞானத்திற்கும் ஆன்மா விஷயமன்று! பின்னையோ! கடத்தினுல் மூடியுள்ள விளக்கமானது தண்டத்தால் அக்கடத்தினை அடித்துச் சிதைக்க அவ்விளக்கமானது எல்லாவற்றையும் விளக்கித் தன்னையும் தானே விளக்கிக் கொள்ளுமல்லவா? அதுபோன்றே உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆன்மாவே நான் என்று எழுகின்ற அகண்டாகார விருத்தி ஞானமானது ஆன்மாவை மறைத்த அறியாமை வடிவமாயுள்ள மறைப்பினைக் கெடுத்துத் தானும் அதனோடுமடியும். மடியவே ஆன்மாவானது எல்லாவற்றையும் விளக்கித் தன்னையும் தாமேவிளக்கிக் கொள்ளும்! சூரியனது விளக்கம் எல்லாவற்றையும் விளக்கித்தன்னை

யும் தானே விளக்கிக்கொள்வது போன்று ஆன்மாவும் பிறிதொன்றிற்கு விஷயமாகாது ஆகலின் அது சுவயம் பிரகாச வடிவமாயுள்ளதாம். எண்வித பிரகாசங்கட்கும் ஆதாரமாயுள்ளதுஎன்று உணரவும்! இன்னும் ஆன்மா பிரகாச வடிவமாம் என்பதைத்தெரிவிப்பாம். நனவுநீங்கி யுண்டாம் கனவில் உள்ள காண்பான்! காட்சி! காணப் படுபொருள் என்ற திரிபுடித் தோற்றமானது புருடன்! இருளுக்குள் பிணம்போன்று கிடப்ப சூரிய சந்திரரது ஒளிகளின்றி அந்த ஒளியால் விளக்கும் கரணங்களும் இன்றி அங்குண்டாகிய விளக்கமானது ஆன்மவிளக்கமே யன்றி வேறே யாது விளக்கமுமின்றும் மீண்டு கனவின் நீங்கியுண்டாம் கேவலாவத்தையிற்ருேன்றும் ஒன்றும் தெரியவில்லைசுகமாய்த் தூங்கினேன் என்றதிலுள்ள!ஒன் றும்தெரியாததாய் மறைத்த அஞ்ஞான விருளையும் சுகத் தையும் அறிந்துள்ளது எது? மீண்டு நனவிலும் மழை நிசியில் உள்ள இருளையும் அவ்விருளின் கண்ணுள்ள பொருளையும் விளக்கியது எது? சூரியப்பிரகாசமில்லாத தால் நேத்திர இந்திரியம் விளக்கமாட்டாது. ஆகலின் ஆன்மா சொப்பிரகாசமென்பதே சித்தித்தது நனவு கனவு என்னும் சகலாவத்தையும் இது கடந்த சுழுத்தி யாகிய கேவலாவத்தைக்கும் அப்பாற்பட்டதாய் துரிய வடிவமாகிய நிரதிசயானந்த சொரூப கூடஸ்த வடிவமா யுள்ளஆன்மாவே நான் என்றும், இக்கூடஸ்த வடிவமா யுள்ள ஆன்மாவேஅப்பரம் பொருள் என்றும அறிந்து! அப்படியறிந்ததாயுள்ள அந்த நினைப்பும்உறங்கினவன் கைப்பதார்த்தமே போன்று நழுவவிட்டு கர்ம கர்த்துரு பாவங்கழன்ற அநுபவரூபமாய் அநுபவிக்க உண்மை ஞானத்தாலன்றி வேறே எவ்வித கருமங்களுக்கும் அது எட்டாததலால் அவன் அருள் கொண்டு அறியார் அறியுந்தரமோ! என்ருர்.

15 முருகன் குமரன் குகன் என்று மொழிர்(து)
உருகுஞ் செயல் தந்து உணர்வென்றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங் கவ எண்குண பஞ்சரனே!

நீலகண்டீய உரை விளக்கம்:—முருகன் = மாருத இளமையுடையோன்! குமரன் = குமாரக் கடவுள்! குகன் உயிர்களின் இருதய குகையில் நிரதிசயானந்த வடிவ பரம் பொருளாயுள்ளவன்! என்று மொழிந்து = என்று சொல்லி! உருகுஞ்செயல் தந்து = அனலில் வைத்துள்ள மெழுகே போன்று உள்ளமானது நெகிழ்ச்சியுறுமாறு அருள் புரிந்து! உணர்வு என்று அருள்வாய் = உண்மை ஞானத்தினை நீ எஞ்ஞான்று அநுக்கிரகிப்பாய்! பொருபுங்கவரும் = போர் புரியும் தேவர்களும்! புவியும் = இவ்வுலகினரும் வணங்கியேத்தும்! குரு புங்கவ = உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள, குரு துரியமாய் நின்ற சுவயப்பிரகாச வடிவமாயுள்ளவனே! எண்குண பஞ்சரனே = நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள் விசும்பு, நிலாப்பகலோன், புலன் ஆயமைந்தன் என்னும் (அட்டமூர்த்தங்களை) அதாவது எண்வித வடிவமாகவுள்ளவனே!

விசேட உரை:—:—உம்மை எண்ணுப் பொருளன உணர்வு = உண்மை ஞானத்தினை! மனோலய மெய்திய வழியல்லது. உண்மை ஞானம் தலைக்கூடல் அரிதாக லின்! உருகுஞ் செயல் தந்து என்றார்! இதனையே! வாதவூரடிகளும் கூறியுள்ளார்கள்!

"உற்றாரை யான்வேண்டேன் ஊர் வேண்டேன் பேர்
[வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத்தமர்ந்துறையும் கூத்தா வுன்குரைகழற்கே
கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே!"

என்னும் என்குணங்களாவன: தன்வயத்தனாதல்! தூய உடம்பினன் ஆதல்! இயற்கையுணர்வினன் ஆதல்! முற்றுணர்வுடமை! இயல்பாகவே பாசங்களினீங்குதல்! பேரருளுடைமை! முடிவிலாற்றலுடைமை! வரம்பிலின்ப முடைமை! என இவை! இவ்வாறு சைவாகமங்களிற் கூறப்பட்டுள்ளன! எண்குணத்தான் தாளை என்றதற்கு பரிமேலழகர் அணிமா! மகிமா! கரிமா! லகிமா! ஈசத்து வம் வசித்துவம் சர்வசக்தித்துவ முதலிய எட்டினையும் கூறியுள்ளார்! உயிர்களினது உள்ளமாய குகை யிலுள்ளவனாகலின் குகன் என்றார். உள்ளமாகிய குகை இருதயகமலத்தில் மத்தியிலுள்ளன! அது, சிதாகாய வடிவினதாயுள்ளது. கருதுவார் இதயத்துக்கமலத் தூறும் தேன் போன்றுள்ளது! ஆகலின் அப்பொருளே எம்மனோர் பொருட்டாய் போக விருப்புடையோர்க்கு வள்ளியம்மை தேவகுஞ்சரியாகிய இருவரோடுற்றபோகி யாயும் வீட்டின் விருப்புடைய யோகியர்க்கு தண்டு கோவணம் அமைந்த யோகியராய திருக்கோலங் கொண்டும் வேண்டுவார்க்கு வேண்டியாங்களித்துக் கலியுக வரதன் என்ற நாமத்தோடும் கண்கண்ட தெய் வமே என உயர்ந்தோரால் தொழுதுயேத்தும் புகழ் களையும் கொண்டு மேற்கு முகமாய் நின்று தன்னிடத்து நெருங்கியுள்ள அன்பர்களை நோக்கி! நீவிர்! என்று வந் தீர்! உமக்கு வேண்டுவன தருவோம்! என்ற திருக்குறிப் போடும் கருணையொழுகும் கண்களால் நோக்கியுள்ளன இறைவனது யோக திருஷ்டியினின்றுந் தோன்றியதால் சித்வெளியாயுள்ள பரம்பொருளேயாகும்! எதனில் உற் பத்தியோ அது காரணத்தின் சொரூபமே காரியமா கலின் மண்ணின் காரியம் கடம்! அது மண்ணின் வடி வமேயாகும் கடலினின்றுண்டாம் அலைதிவலை குமிழிகள் அக்கடல் நீர் வடிமேயாகலின் சுவயம்பிரகாச வடிவமா

யுள்ள சிவத்தினின்றும் தோன்றியதாகலின் இது அச் சிவக்கொழுந்தேயாதுமென்றுணர்க.

16. பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ
வீரா முதுசூர்படவே லெறியுஞ்
சூரா சுரலோ கதுரந் தரனே.

நீலகண்டீய உரை விளக்கம் :— பேராசை எனும் பிணியில்=பெரிய அவா என்கின்ற நோயால்! பிணி பட்டு=கட்டுப்பட்டு! ஓராவினையேன்=எனது அறி யாமையால்! இது உண்மை அறிவானந்த வடிவமா யுள்ள எனது ஆத்மாவின் கண் வந்து பொருந்தியது யாதினுல்! இதனை ஒழிப்பதற்குள்ள நெறியாவது யாது அதனை அறியும்படியாய நெறியினைத் தெரிவிப்பவர் எங்குளார் என்று ஒரு சிறிதும் ஆராச்சியின்றிய தீவினை யுடையேன்! உழலத்தகுமோ=கறங்கே போன்று சுழல் வது தகுதியுடையதாகுமோ! தகாது! வீரா=மனம் பொறிகளைத் தம்வயமாக்கிய வீரனே! முதுசூர் படவேல் எறியும்! பழமையாயுள்ன சூர்ப்பகை யொழியும்படி! வேற்படையினைச் செலுத்தும்! சூரா=சூராதி சூரனே! சுரலோக துரந்தரனே=தேவர்களது உலகினைப் பாது காப்பவனே!

விசேட உரை :—ஆசையெனும் பிணி! என்பது போன்றே!

"அவா என்ப! எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாப் பிறப்பீனும் வித்து!"

"வேண்டாமையன்ன விழுச் செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃது ஒப்பது இல்!"

என்று பொய்யாமொழியும்

''வேண்டாமை என்னும் விழுச் செல்வம் பெற்றோம்
வேண்டல் எனும் பிணி வேரறப் பெற்றோம்
உடுக்கையும் கோவணமாகவும் பெற்றோம்
ஒன்றும் குறை நமக்கில்லை காண் பெண்ணே''

எனப் பிறரும் கூறியுள்ளார்கள்! ஆதலால்! பேராசை எனும் பிணி என்றார். அவித்தையும் அது பற்றியுண்டாம் அகந்தையும் அது பற்றிய மனையாதியரை என தென வரும் மமதையும் அது பற்றி எழும் அவாவும் அது பற்றி பொருள் மேற்செல்லுமாசையும் அதனால் தடைவரின் அதுபற்றி வருங்கோபமுமென வடநூலார் சொல்லும் குற்றமைந்தனுள் அவாவுதல் ஆசையின்கண் சேறலின் அதனையே விதந்து பேராசை எனும் பிணி! என்றார் நமது அடிகளார்.

17. யாமோ தியகல் வியுமெம் மறிவுந்
தாமே பெறவே லவர்தந் ததனாற்
பூமென் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமே னடவீர் நடவீ ரினியே.

நீலகண்டீய உரை விளக்கம்:—யாம் ஓதிய கல்வியும் = யாம் இதுகாறும் ஆசிரியர்பாற் பயின்ற கல்விப் பயிற்சியும்! எம் அறிவும் = அதனாலுண்டாம் நூலறிவும் (அபரஞானமுப்) வேலவரே = திருக்கரத்தில் வேற்படையை ஏந்திய பெருமானே! தாமே பெற = நாம் அடையும்படி! தந்து அருளி அதனால் = அக்கல்வியறிவால்! பூமேல் மயல் போய் அற = இப்பூமியின் கண் உண்மை ஞானத்தால் அறியாமையால் வந்துள்ள மயக்கமகன்று முற்று மொழிய! மெய்ப்புணர்வீர் = உண்மை அறிவானந்த வடிவ ஆன்ம சொரூபத்தில், உலையினிற் காச்சிய இரும்பினிற்றெளித்த நீரானது அவ்விருப்பின்கண்ணுள்ள அக்கினியில் லய பாவத்தை

யடைதலே போன்று, சீவத்துவம் அதில் லய பாவத்தை யடையும்! நாமேல் இனி நடவீர் = நாவினுலேயே அவனது புகழ்களைப் பன்முறை இனிப்பாடுமின்!

விசேட உரை :—"கற்றதனுலாய பயன் என்கொல் [வாலறிவன்
நற்ருள் தொழா ரெனின்!

என்னும் பொய்யாமொழியார் புகன்ற கருத்துப் பற்றிய தென்க! தேவாரம்:

"விடுக்கிலாதானை வீமனே விறல்
விசயனே வில்லுக்கு இவனென்று
கொடுக்கிலாதா னைப்பாரியே என்று
கூறினும் கொடுப்பாரில்லை
பொடிக்கொள் மேனியன் புண்ணியன்
புகலூரைப்பாடுமின் புலவீர்காள்
அடுக்கு மேல் அமர்லோக மாள்வதற்கு
யாதுமையுற வில்லையே!"

எனச் சுந்தரரும் கூறியுள்ளார். அதனது கருத்துப்பற்றி யதே யாகுமென்றுணர்க!

18. உதியா மரியா வுணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா
அதிகா வநகா வபயா வமரா
வதிகா வலசூ ரபயங் கரனே.

நீலகண்டீய உரை விளக்கம் :—உதியா மரியா = அநாதியாயுள்ளதாகலின் என்றும் தோற்றமும் ஒடுக்கமுமின்றியதாயும்! உணரா மறவா = நினைப்பும் மறப்புமின்றியதாயும்! விதிமால் அறியா = திசைமுகனும்

திருமாலும் அவர்களது கர்மோபாசனைகளால் அறிய வியலாததாய் உள்ள! விமலன் புதல்வா = நித்திய முத்த னுகிய சிவபெருமானுக்குப் புதல்வரே! அதிகா = சாமிக் கும் சாமியாயுள்ளதால் யாவரினும் மேலோனே! அநகா = பாவமற்றவனே! அபயா = அன்பர்களுக்குப் புகலிட மானவனே! அமராவதி காவலா = அமரருலகிற்குத் தலைவனே! சூரபயங்கரனே = சூர்ப்பகைக்குப் பயத்தினை விளைவிப்பவனே!

விசேட உரை:— சூரபயங்கரன் என்றார்! விராட் வடிவமெடுத்து முன் தோன்றியபோது இதுகாறும் இச்சிறுவனுயுள்ள இக்குமரனு என்னை வெல்லுவன் என்று எண்ணியுள்ள அவனது உள்ளமானது நடுக் குறும்படி செய்தமையால்! உதியா, மரியா, உணரா, மறவா என்பவற்றை! உதித்து மரித்து உணர்ந்து மறந்து எனச் செயவென்னெச்சமாக்கியும்! விதிமால் என்பவற்றை அறியாவென்பதனேடும் கூட்டி முடிக்கி னும், முடித்தல் இழுக்காது. உதியா முதலியன ஈறு கெட்ட வெதிர்மறைப் பெயரெச்சங்கள்! விதிமால் என்பன உம்மைத் தொகை உதியா வென்பனவற்றை விமலனேடியைக்க! அமராவதி என்றது அமரர் உலகி லுள்ள தலைமை வாய்ந்த நகரை என்னை அடிமையாகக் கொண்டருள்க என்பது இசை எச்சமென்க.

19. வடிவுந் தனமும் மனமுங் குனமுங்
குடியுங் குலமும் குடிபோ கியவா
அடியந் தமிலா வயில்வே லரசே
மிடியென் ருெருபா விவெளிப் படினே.

நீலகண்டீய உரை விளக்கம் :—அடி அந்தம் இலா அயில் வேல் அரசே = முதலும் முடிவும் இன்றிய முழு முதற் பொருளே. கூர்மையான வேற்படையையுடைய

வேந்தனே! மிடியென்ற ஒரு பாவி=வறுமை என்கின்ற ஒரு பாவி! வெளிப்படின்=வெளித்தோன்றுமாயின்! வடிவும் = அழகும்! தனமும் = பொருளும்! மனமும் = நன்மனமும்! குணமும் = பண்பும்! குடியும் = உயர் குடிப் பிறப்பும்! குலமும் = மரபும்! குடி போகியவாறு அழிந்துபோன தன்மை என்னே!

விசேட உரை:—நின்னைப் போற்றாதவர்க்கு வறுமையே யமையுமெனக் குறிப்பித்தவாறு. அதற்குதாரணம்! பட்டினத்தடிகள்:

"ஆற்றோடு தும்பையணிந்தாடும் அம்பலவாணர் தம்மைப்
போற்றாதவர்க் கடையாளமுண் டிந்தப் பூதலத்தில்
சோற்றாவியற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்றே
ஏற்றாலும் பிச்சை கிடையாமல் ஏக்கற்றிருப்பர்களே!

என்றார். பண்பிற்குப் பண்பில்லையேனும் தன்னை ஆக்கினானை இருமையும் கெடுத்தற் கொடுமை பற்றி அழுக்காறு என ஒரு பாவி—என்ற அதற்குப் பரிமேலழகர் உரைத்தமையால்! தீவினையின் பயனாய வறுமையை! மிடியென்றொரு பாவி என்றார் அடிகளும். போகியவாறு என்புழி றுவ்வீறு தொகுத்தலாய் நின்றது என்னென்பதெஞ்சி நின்றது. முருகப் பெருமான் நிரதிசயானந்த வடிவமாயுள்ள சிவமே என்று கருதியே அன்றோ!

"ஆதியொடு அந்தம் ஆகிய நலங்கள்
ஆறுமுகமென்று தெரியேனே
ஆனதனி மந்திர ரூப நிலைகொண்டதாடு
மயிலென்பதறியேனே

சோதியுணர் கின்றவாழ்வு சிவம் என்ற சோஹம்
அது தந்து எனை ஆள்வாய்
சூரர்குலம் வென்று வாகையுடன் சென்று
சோலைமலை நின்ற பெருமாளே

என்றும் கூறியது கொண்டுணர்க.

20. அரிதா கியமெய்ப் பொருளுக் கடியே
னுரிதா வுபதேச முணர்த் தியவா
விரிதா ரணவிக் ரமவேளி மையோர்
புரிதா ரகநா கபுரந் தரனே.

நீலகண்டீய உரை விளக்கம் :—அரிதாகிய மெய்ப் பொருளுக்கு=மலவிட்க்ஷேப தோஷங்களோடு கூடிய மனத்திற்கும் இலக்கணா விருத்திக்கேயன்றி வாக்கிய விருத்திக்கும் அப்பாற்பட்டதாயுள்ள நிரதிசய ஆனந்த வடிவமாயுள்ள பரம் பொருளுக்கு! அடியேன் உரிதா =அடியேன் அதனைப் பெற்றுக் கொளும் தகுதியாய விவேக முதலிய நான்கு சாதனங்களும் நிறைந்த பக்குவனாகியுள்ளவன் என்று கருதி! உபதேசம் உணர்த்தியவா=உண்மை ஞானத்தை உபதேசம் செய்தருளிய தன்மை என்னே! விரிதாரண=முப்பதென் னும் தொகையினையுடைய விரியினை வாய்ந்த தூசிப் படைக்குத் தலைவனே! விக்ரமவேள்=வலிமையுடைய செவ்வேளென்னும் திருப்பெயரை உடையோனே! இமையோர் புரிதாரக=தேவர்கள் விரும்புகின்ற தாரக மந்திரமாயுள்ள ஓம் என்னும் வாசகத்திற்கு வாச்சிய மாயுள்ள பரம்பொருளே! நாகபுரந்தரனே=தேவ சேனாதிபதியாயுள்ள பெருமானே!

விசேட உரை:—உரிது = குணியைக் குணமாகக் கூறுவதோர் மரபு வழுவமைதி! விரிதாரண விக்ரம

வேள் என்பதற்கு, எல்லை இன்றிப் பரந்த பராக்ரமத்தை யுடைய வேள் எனினும் பொருந்தும்! படைவகுப்பு வியூகம். அது எழுவகையுறுப்புள்ளதாய் நான்கு வகையாய் விரியால் முப்பதாப்! உறுப்பு ஏழாவன அரமுதற் ரேட்டியீருயின! வகை நான்காவது! தண்டம்! மண்டலம! சங்கதம்! போகமென்பன இவையாம்! விரிமுப்பதாவன! தண்டவிரி பதினேழும்! மண்டலவிரி இரண்டும்! சங்கதவிரி ஆறும்! போகவிரி ஐந்தும் என்பனவாம். இவற்றின பெயர்களும் இலக்கணங்களும் ஈண்டுரைப்பிற் பெருகும் அவற்றை பாரதம் கந்தப் புராணம் முதலியவற்றிற் காண்க!

புரிதல்=எப்பொழுதும் சொல்லுதல் உரிதாக வென்பது. ஈறு தொகுத்தலாக நின்றது. வேள் என்றது இங்குச் செவ்வேளை.

21. கருதா மறவா நெறிகா ணவெனக்
கிருதாள் வனசந் தரவென் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூ ரவிபா டணனே.

நீலகண்டீய உரை விளக்கம்:—கருதா மறவா நெறி காண=நினைப்பும் மறப்பும் இன்றிய நனவினிற் சுழுத்தி நிலையைப் பொருந்தும் நெறியினை யான் காணும்படி! எனக்கு இருதாள் வனசம் தர என்று இசைவாய்=அடியேனுக்கு உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள உனது இருபாத தாமரைகளையும் என்று அருளும்படி இசைவாய்! வரதா=தன்னை அடைந்தவர்க்கு வரமருள் பவனே! முருகா=மாருத இளமையுடையவனே! மயில் வாகனனே!=மயிலை ஊர்தியாகவுடையவனே! விரதா =மனம் பொறிகளைத் தன்வயமாயுள்ளவனே! அசுரசூர

விபாடணனே=அவுணர் குலத்துப் பிறந்த சூர்ப் பகையின் செல்வத்தை அழிப்பவனே!

விசேட உரை :—கருதா மறவா நெறி—சகல கேவலங் கடந்த! (நிருவாண நிலை) துரிய வடிவ கூடஸ்தனே அப்பரம் பொருளென அதில் நிலைபெற்றுள்ள அசம் பிரஞ்ஞாத சமாதி நிலையாகும்! அதற்குதாரணம்:

"தஞ்சமாங்குருவும் சொன்ன தத்துவ வழி! தப்பாமல்!
பஞ்சகோசமுங் கடந்து! பாழையுங் தள்ளி! உள்ளில்
கொஞ்சமாம் இருப்பும் விட்டுக்! கூடஸ்தன்!பிரஹ்மம் [என்னும்
நெஞ்சமும் நழுவியொன்ருய் நின்ற! பூரணத்தைக் [கண்டான்

என்றும்,

அநுபவானந்த வெள்ளத் தழுந்தியே அகண்டமாகி
தநுகரணங்களாதி சகலமும் இறந்து சித்தாய்
மநுது பூரணமாய்த் தேகமான சற்குருவுங்காண
நநவினிற் சுழுத்தியாகி நன்மகன் சுவாபமானுன்!

என்றும்! ஞான நூல்கல் கூறும் இதனை நன்குணர விரும்புவோர் விருத்திப் பிரபாகரம், விசாரசாகரம் தத்துவானு சந்தானம், ஆன்ம புராண முதலிய நூல் களில் அதன் விரிவைக் காணலாம். ஆண்டுக் காண்க!

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்

என்றும் கூறும் ஆகலின் இருதாள் வனசம்! என்ருர்!

22. காளைக் குமரேச னெனக் கருதித்
தாளைப்பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே!

**நீலகண்டிய உரை விளக்கம்** :—காளைக் குமரேசன் எனக் கருதி = காளையே போன்ற நடையினையுடைய குமாரப் பெருமான்என நினைந்து! தாளைப்பணியத் தவ மெய்தியவா = அவனது உண்மை அறிவானந்த வடிவ மாயுள்ள திருவடிகளை வழிபடுமாறு! தவம் எய்திய ஆறு = முன்னைய பிறப்பினுள்ள தவத்தின் பயன் வந்தெய் திய தன்மை இது என்னே! பாளைக்குழல் வள்ளி பதம் பணியும் வேளை = பாளை போன்ற கூந்தலையுடைய வள்ளியம்மையின் திருவடிகளையே பணியா நின்ற! செவ்வேள் என்னும் திருநாமமுடையானை! சுர பூபதி மேருவையே = வானுளார் தலைவனுகிய இந் திரனுக்கும் மலைகள் யாவற்றிற்கும் மேலான சிறப் பமைந்த மகா மேருவே போன்றுள்ள பெருமானை!

விசேட உரை;—காளை = உவமை ஆகுபெயர்! வள்ளி பதம் பணிதல் ஊடல் தணிப்பான் கருதி என்க! இதனைக் கந்தப் புராணத்துள்,

''ஈறில் முதியோன் இரங்கியிரந்து குறை
கூறி மதிமயங்கிக் கும்பிட்டு நின்றளவில்''

என்றும் பிரபுலிங்க லீலையில்,

ஆதிபகவன் றனதூடல் தணிப்பான் பணிய அவ்விறை [வன்
பாதமிறைஞ் சுமதற்கு!

எனவும் கூறியவாற்றுனுணர்க! எய்தியவா = தவத்தின் பயன்தான் எங்கே இருப்பினும் அங்கே தாமாகவே வந்து பொருந்தும் என்பதாம். அதாவது மழை காலத்து இருளின் கண் பசுக்கூட்டத்தின் மத்தியிலுள்ள தாய்ப் பசுவானது இதுவென அறிந்து செல்லுங் கன்றே போன்று தேடி வந்தடையுமென்றுணர்க.

23. அடியைக் குறியா த றியா மையினுன்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக்ரமவேல் மகிபா குற மின்கொடி
யைப்பு ணருங் குணபூ தரனே

நீலகண்டீய உரை விளக்கம்:— அடியைக் குறியாது = நிரதிசயானந்த வடிவமாயுள்ள உனது திருவடிகளை உள்ளத்தில் குறிக்கொள்ளாமல்! அறியாமையினுல் = எனது அஞ்ஞானத்தால்! முடியக்கெடவோ = முற்றும் அழியவோ முறையோ முறையோ = இது நீதியோ நீதியோ! அன்று வடிவிக்கிரமவேல் மகிபா = கூர்மையான வேற்படையை திருக்கரத்தில் ஏந்திய அரசே! குற மின் கொடியைப் புணரும் குணபூதரனே = மின்னற் கொடிபோன்ற குறவர்மரபில் வளர்ந்த வள்ளியம்மையை மணந்த குணமலையே!

விசேட உரை:—ஓகாரம் இரண்டின் முன்னது வினு! பின்னது எதிர்மறைப் பொருட்டு! முறை என்ற அடுக்கு இரக்கக் குறிப்பு, மின்கொடி! அன்மொழித் தொகை குணபூதரம் உருவகம்! மகிபா என்றது இங்குச் சர்வலோக சரண்யன் என்னும் பரத்துவம் கூறப் பட்டது, அறியாமையின் இலக்கணம்,

'தானலா தொன்றுதன்னைத் தானெனக் கருதிக் கொண்டே
யானெலாம் செய்தேன் என்னும் ஞானம் அஞ்ஞானம்!

எனவும்.

"பிரஹ்மமாம் தனைமறந்த பேதைமையே அஞ்ஞானம் எனவும்! நூல்களிற் கூறியுள்ளது. அவிச்சை அஞ்ஞானம் அறியாமை என்பனயாவும் ஒரு பொருட் கிளவி; அது உண்மை ஞானத்தால் ஒழிந்தாலல்லது உண்மை

அறிவானந்த வடிவமாயுள்ள ஆன்ம சொரூபத்தை அறிய முடியாதாகலின்! மூடியக் கெடவோ என்றார்!

24. கூர்வேல் விழிமங்கை யர்கொங் கையிலே
சேர்வே னருள் சேரவுமெண் ணுமதோ
சூர்வே ரொடுகுன் றுதொளைத் தநெடும்
போர்வே லபுரந் தரபூ பதியே

**நீலகண்டிய உரை விளக்கம்:**—கூர்வேல் விழி மங்கையர் கொங்கையிலே = கூர்மையான வேல் போன்ற கண்களையுடைய மாதர்களது நகில்களின் கண் விருப்பம் வைத்துள்ள யான்! அருள் சேரவும் எண்ணுமதோ = உனது உண்மை ஞானத்தினை அடையவும் கருதுவேனோ! சூர்வேரொடு குன்றுதொளைத்த நெடும் போர் வேலவ = சூர்ப்பகையை அவனது குலத்தை வேரோடுங் களைந்துள்ளதும் கிரௌஞ்ச மலையைப் பிளந்துள்ளதுமான மிக்க போரைக் கடந்த வேற்படையை யுடையோனே! புரந்தரபூபதியே = இந்திர லோகத்திற்குத் தலைவனே!

**விசேட உரை:**—வேல்விழி = உவமைத் தொகை. வேல் உவமையாகு பெயர்! எண்ணும் அது. உமமை எதிர்கால் இடை நிலை ஓகாரம் எதிர்மறை, ஒடு உடனிகழச்சிப் பொருளது.

25. மெய்யே யென வெவ் வினைவாழ் வையுகந்
தையோ வடியே னலையத் தகுமோ
கையோ வயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயி லேறிய சேவகனே.

**நீலகண்டிய உரை விளக்கம்:**—மெய்யே என = இவை யாவும் உண்மையே என்று! வெவ்வினை வாழ்வை உகந்து = இருவினைக்கீடாய் வரும் இவ்வுலக வாழ்வினை விரும்பி! ஐயோ அடியேன் அலையத்தகுமோ = அந்தோ

அந்தோ அடியேன் வருந்தப்படுமோ! கையோ அயிலோ கழலோ முழுதுஞ் செய்யோய் = திருக்கரமும்! வேற்படை யும் திருவடியும் அன்றி! முழுவதும் சிவந்த திரு மேனியையுடையோனே! மயில் ஏறிய சேவகனே = மயிலை ஊர்தியாகக் கொண்ட ஆண்மைத் தன்மை யுடையவனே!

விசே_ உரை —ஐயோ என்றது இரக்கக் குறிப்பு உம்மை முற்று! "கையோ! அயிலோ கழலோ! என்புழி! ஓகாரம் பிரிநிலைப் பொருட்டு! அயில் = பண்பாகு பெயர்.

26. ஆதார மிலே னருளைப் பெறவே
நீதா னொருசற் றும்நினைந் திலையே.
வேதா கமஞான விநோத மனோ
தீதா சுர லோக சிகா மணியே.

நீலகண்டீய உரை விளக்கம் :— ஆதாரமிலேன் அருளைப் பெறவே = யாதொரு ஆதரவும் (பற்றும்) இல்லாத நான்! அருளைப்பெற = உண்மை ஞானத்தைப் பெறும்படியாக! நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே = நீயே ஒரு சிறிதும் எண்ணினாய் இல்லையே! வேதாகம ஞான விநோத = நான்கு வேதங்களும் இறைவனாற் கூறிய ஆகமங்களும் கூறும் உண்மைப் பொருளையே விளக்கும் விளையாட்டாக வுடையவனே! மனோதீத சுரலோக சிகாமணியே = மலவிட்சேபதோஷங்களை யுடைய மனத்தால் அறியப்படாதவனே. தேவருலகி லுள்ளார் யாவரும் முடிமீது அணியும் பொள்ளா மணியே! போன்றவனே!

விசேட உரை :—ஒரு = சிறுமை குறித்து நின்றது. ஒரு சற்றும் என்புழி, உம்மை முற்றுப் பொருளோடு

இழிவு சிறப்பு! வேதாகமம் என்பன! இருக்கு, எசுர், சாமம், அதர்வணம்! என்பனவும் ஈசுர வாக்கியமானது இருபத்தெட்டுச் சிவாகமுமாம்! மனோதீதா என்றதனால் இலக்கண விருத்தியாலன்றி வாக்கிய விருத்திக்கெட்டாதெனவும் வருவித்துரைத்துக் கொள்க! மனோதீதா எனவும் பாடமுளது.

27. மின்னே நிகர் வாழ்வை விரும்பியா
னென்னே விதியின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே யருளே
மன்னே மயிலே றியவா னவனே.

நீலகண்டீய உரை விளக்கம் :—மின்னே நிகர் வாழ்வை விரும்பிய யான் என்னே = மின்னே போன்று தோன்றி மறையும் இவ்வுலக வாழ்க்கையை யான் விரும்ப என்ன பொருள்! விதியின் பயன் இங்கு இதுவோ = எனக்கு வினையின் பயனாய் வருவது இவ்விடத்தில் இதுதானோ! பொன்னே = சுவர்ணம் போன்றவனே! மணியே = மாணிக்கமே போன்றவனே! பொருளே = உண்மை ஞானத்தால் அறியும பரம்பொருளே! அருளே = ஞான வடிவமாயுள்ளவனே! மன்னே = இறைவனே! மயில் ஏறிய வானவனே! மயிலை ஊர்தியாகவுடைய தெய்வமே!

விசேட உரை:- ஏனைவொளிகள் போலாது இரவு பகலாகிய சகல கேவலங்கள் கடந்த சுவயம்பிரகாச வடிவமாகலின் மணியே என்றார், இன்பம்! இம்மைக்குள்ளது பொருளும் மறுமைக்குள்ளது அருளும் ஆகலின் பொருளே! அருளே! என்றும் இத்துணையன் இயாவன் என்பார்! மன்னே என்றும் அத்தகைய மேலோன் எங்குளான் எனில்! மயிலேறிய வானவன் எனவும் கூறி

ஞர்! மின்னல் தோன்றிச் சிறிது பொழுதும் நில்லாதாக லின் இவ்வுலக வாழ்வின் சிறுமை தோன்ற அங்ஙனம் உவமை கூறப்பட்டது.

28. ஆனு வமுதே யயில்வே லரசே
ஞானு கரனே நவிலத் தகுமோ
யானுகிய வென்னை விழுங்கி வெறுந்
தானுய நிலை நின்றது தற்பரமே.

நீலகண்டீய உரை விளக்கம் :—ஆனுவமுதே = கெடுதலடையாத சாவாமருந்தே! அயில் வேல் அரசே= கூர்மை பொருந்திய வேற்படையை திருக்கரத்திலேந்தியவிறைவனே! ஞானுகரனே = அறிவு வடிவமாயுள்ளவனே! யானுகிய என்னை = துவம்பத வாச்சியமாகிய சீவத்துவரூபமாயுள்ள என்னை. விழுங்கி வெறுந்தானுய் நின்றது நிலை = தற்பத இலக்ஷியார்த்தமாகிய பரமான்மாவோடு அபேதப்படுத்தி நிரதிசய பரமானந்த வடிவமாயுள்ள பரம் பொருளாய் நின்றது அந்நிலை. தற்பரம் = அந்தப் பரம் பொருளை = நவிலத்தகுமோ = இலக்கணு விருத்தியால் அன்றி வாக்கிய விருத்தியால் அறிவிக்கும் பான்மையதோ!

விசே. உரை :—ஆனுத என்றது ஈறு தொகுத்தலாய் நின்றது. ஞானுகரம் இருபெயரொட்டுப் பண்புத் தொகை வடநூல் முடிவு! ஆதிபகவன் என்ருற் போல, உண்மை ஞானத்தால் அறியாமை கெடவே அதன் கண் ஆபாசமாகிய பிரதிபிம்ப வடிவ சீவத்துவம் பிம்ப வடிவ பரமான்மாவோடு, அபேதமாவதே தானுய் நின்ற நிலை (துரிய வடிவ நிலை) ஆதலால் என்னை விழுங்கி வெறுந்தானுய் நிலை நின்றது என்ருர். "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன்

என்று எழுதிக் காட்டொணாதே!'' என்றார் சொல் மன்னரும்!

2௯. இல்லே யெனும் மாயை யிலிட் டனைநீ
பொல்லே னறியா மைபொறுத் திலேயே
மல்லே புரிபன் னிருவா குவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே.

நீலகண்டிய உரை விளக்கம் :— இல்லே எனும் மாயையில் இட்டனை = மலடி மகன் மருடக் கொம்பு முதலியன போன்று மூன்றுகாலத்திலும் பொய்மையாயுள்ள சகசீவ பரமென்னும் நாமரூபங்களாய்த் தோன்றிய இதனை மெய்மையாகக் கருதி உழலும்படி வைத்துள்ளாய் நீ பொல்லேன் அறியாமை பொறுத்திலேயே = நீ தீங்கினையுடையேனது அறியாமையை உண்மை ஞானத்தால் கெடுத்து என்னை உய்வடையுமாறுள்ள திருக்குறிப்போடு நான் செய்துள்ள! தவறுகளைப் பொறுத்தருளினை இல்லை! (அதற்கு யான் என் செய்கேன்) மல்லேபுரி பன்னிரு வாகுவில் = மற்போரேயே விரும்பும் பன்னிரு புயங்களிலும்! என்சொல்லே புனையும் சுடர் வேலவனே = எனது புல்லிய சொற்களால் அலங்கரிக்கப் பட்ட மாலேயை அணிந்துள்ள ஒளியை வீசும் வேற் படையை திருக்கரத்திலுடையவனே!

விசேட உரை :—யாது இல்லேயோ அதுவே மாயை அகடிதகடனையென்னும் சாமர்த்தியமாயுள்ளது! அதன் இலக்கணமாவது வேதாந்த சூடாமணியில்

''விண்ணில் மலரெனத் துச்சமே எனவும்!
இப்பி வரும் வெள்ளி போல
எண்ணும நிர்வாச்சியமாம் எனவும்!
உயிர் போல் நித்தமெனவும் நிற்கும்

உண்ணிலவுதமம்! மாயை மோகமுடன்!
அவித்தை! பொய்மை! உருவியென்றே!
நண்ணுமிவை மாயா பஞ்சகமாகும் என
அறிஞர் நவில்வர் அன்றே!"

எனவும் கூறுவன அதன் விரிவை விசாரசாகர முதலிய நூல்களிற் காண்க!

50. செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றொவ்வா ததென வுணர்வித் ததுதா
னவ்வா றறிவா ரறிகின் றதலா
லெவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே.

நீலகண்டீய உரை விளக்கம்:—செவ்வான் உருவின் =செக்கர் போன்ற திருமேனியையுடையவன்! திகழ் வேலவன் = திருக்கரந்தனிலேந்தி விளங்கா நின்ற வேற் படையை உடைய பெருமான்! அன்று ஒவ்வாததென = அஞ்ஞான்று உண்மை ஞானத்தாலன்றிப் பிறிதோராற் ருன் அறியப்படாததென! உணர்வித்தது = அவ் வுண்மை ஞானத்தால் அப்பொருளைக் குறிப்பாக உணர்த்தியுள்ள! அதுதான் அவ்வாறு=நிரதிசய பர மானந்த வடிவமாயுள்ள அதனை அந்நெறியே நின்று! அறிவார்=கூடஸ்த வடிவ ஆன்மாவே அப்பரம்பொருள் என அநுபவரூபமாய்! அறிகின்றதலால் அறிந்து கொள்ளத் தக்கதே அல்லாமல்! எவ்வாறு ஒருவர்க்கிசை விப்பது=வேறே எவ்விதமாக ஒருவர்க்கு அதனை அறி விப்பதாகும்!

விசேட உரை :—செவ்வான் உருவினன்! செவ்வான் போலும் என ஒப்புப் பொருள்! இதற்குதாரணம் திரு மந்திரம்!

“முகத்துக்கண் கொண்டுபார்க்கின்ற மூடர்காள்
அகத்துக்கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்
மகட்குத்தாய் தன்மணாளனோடுடிய
சுகத்தைச் சொல்லெனச் சொல்லுவதெங்ஙனம்.”

என்பதனுல் அறிக.

31. பாழ்வாழ் வெனுமிப் படுமா யையிலே
வீழ்வா யெனவென் னைவிதித் தனையே
தாழ்வா னவைசெய் தனதா முளவோ
வாழ்வா யினிநீ மயில்வா கனனே.

நீலகண்டீய உரை விளக்கம்:—மயில் வாகனனே = மயிலையே ஊர்தியாகச் செலுத்தும் பெருமானே! பாழ் வாழ்வு எனும் இஃபடுமாயையிலே = கானல் நீரே போன்று தோன்றி மறையும் தன்மையனவாயுள்ள இவ் வாழ்க்கையென்கின்றது இல்லாதொழியும் இம்மாயை யின் கண்! வீழ்வாய் என = வீழக்கடவாய் என்று! என்னை விதித்தனையே = என்னை இவ்வுலகிற் கறங்கே போல் சுழலுமாறு செய்தனையே! தாழ்வானவை செய்தனதாம் உளவோ = நான் யாதேனும் தாழ்வான செயல்கள் செய்ததுண்டோ! வாழ்வாய் இனி நீ = ஆகலின் நீயே இனி வாழக்கடவாய்.

விசேட உரை:—படுதல் மீண்டு அழிதல் மேற்று மற்றைக் கண்தான் தாராதொழிந்தால் வாழ்ந்து போதீரே என்று நாவலூர்ப் புலவருங் கூறியுள்ளார் ஆகலின் இவரும் வாழ்வாய் இனி நீ என்ருர் மாயையின் வஞ்சனையால் மயக்கத்தினையடைந்து, நான் எனதென் னும் செருக்கால் இவ்வுலக வாழ்வினை மெய்யெனக் கருதி இருத்தலின் பாழ்வாழ் வெனும் இப்படுமாயை யிலே என்ருர்!

32. கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரிவே டர்குலப் பிடிதோய்
மலையே மலைகூ றிடுவா கையனே.

**நீலகண்டீய உரை விளக்கம்** :—கொலையே புரிவேடர் குலப் பிடிதோய்=கொலை செய்வனையே தங்குலத் தொழிலாகக் கொண்ட குறவர்களது குலத்தில் வளர்ந்த பெண் யானை போன்ற நடையினையுடைய வள்ளியம்மையினது தோய்நலைப் பொருந்திய! மலையே=மலையே போன்றவனே! மலைகூறிடு வாகையனே=கிரௌஞ்ச வெற்பினைக் கூறுபடுத்திய வெற்றிமாலையை அணிந்துள்ள பெருமானே! கலையே பதறி=மானனது அச்சத்தாற் கலக்கத்தையடைந்து! கதறி=துன்பத்தால் இறைச்சல் செய்தும்! தலையூடலையே படுமாறது=தலைமீதுள்ள கொம்புகளாற் சிக்குற்று வருந்துவதே போன்று! வாய் விடவோ=யான் நின் சன்னதியில் கதறுவதோ!

**விசேட உரை** :—பிடியானைகள் மலையைச் சேரல் மரபாதலின் முருகப்பெருமானை! மலையெனவும், அம்மையார் இருவரும் பிடிகளாகுமெனவும் உருவகம் செய்துளார். வாகை என்றது, வெற்றியின் பொருட்டணியும் பூமாலை யாமென்றறிக.

33. சிந்தா குலவில் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே.

**நீலகண்டீய உரை விளக்கம்** :—சிந்தாகுல இல்லொடு செல்வமென்னும் = துன்பத்திற்கே சாதனமாயுள்ள

பெண்கள் செல்வ முதலிய! விந்த அடவி=வியப்பாகிய ஆசை என்னும் வனத்தினை விட்டு! என்று விடப் பெறுவேன்=எஞ்ஞான்று நீங்கப் பெறுவேன்! மந்தாகினி தந்தவரோதயனே! கங்கா தேவியார் அருளிய புத்திரனே! கந்தா=ஆறுருவும் ஒருருவாய பொருளே! முருகா=என்றும் மாருதவிளமையுடைய பரம்பொருளே! கருணாகரனே=கருணைக்கிருப்பிடமானவனே! அல்லது (அருள் வடிவமாயுள்ளவனே!)

விசேட உரை:—மண்ணாசையென்பது உபஇலக்கணத்தாற் பெற்றும். மனைவி, மக்கள், பொருள் என்னும் மூன்றும் துன்பத்திற்கே ஏதுவாகலின் அவற்றினை அடவியென உருவகம் செய்துளார் அதனின்றும் நீங்குவது திருவருட்டுணையால் அல்லது முடியாவாகலின் என்று விடப்பெறுவேன், என்றுங் கூறினர்! மந்தாகினி தந்தவரோதயன் என்றது பெருமானது திருநாமத்துள் ளொன்றாகிய காங்கேயன் என்னும் நாமங் கருதி என்க.

34. சிங்கா ரமடந் தையர்தீ நெறிபோய்
மங்கா மலெனக் குவரந் தருவாய்
சங்க்ரா மசிகா வலசண் முகனே
கங்கா நதிபா லக்ருபா கரனே.

நீலகண்டீய உரை விளக்கம்:—சிங்கார மடந்தையர்= அலங்காரமாயுள்ள பெண்களது! தீநெறி போய்= தீமையான மார்க்கஞ் சென்று! மயங்காமல்=சுகசாதநம் என்று அதில் மயக்கத்தினையடையாமல்! எனக்கு வரந் தருவாய்=அதனின்றும் விடும்படியாயுள்ள உண்மை ஞானத்தினைத் தந்து அருள்புரிவாய்! சங்க்ராம சிகாவல =போர் புரிகின்ற மயிலையே வாகனமாக உடையவனே, சண்முகனே! ஆறு திருமுகங்களை உடையோனே!

கங்கா நதிபால = கங்கா தேவியினது மைந்தனே! க்கிருபாகரனே = கருணைக்கிருப்பிடமானவனே.

விசேட உரை:—தீநெறி என்றது காமத்தை! முற்றத் துறந்த முனிவரையும் காமம் வருத்துமாகலின்! மயங்காமல் என்றார்! வரம் என்றது உண்மை ஞானத்தால் உண்மை அறிவானந்தமயமாயுள்ள அவனது சொரூபத்தை அடைவதனை க்ருபாகரன்! கருணைக்கே இருப்பிடமானவன்! சூர்ப்பகையை மயில்வாகனமாகக் கொண்டது. அவன் மயில் வடிவாய்ப் போர் புரிவான் வர, அவனையே வாகனமாகக் கொண்டுள்ளதெனவறிக! சங்க்ராம சிகாவல என்றதாம் என்றது. அது குறித்ததுவே!

5. விதிகாணு முடம்பை விடா வினையேன்
கதிகா ணமலர்க் கழலென் றருள்வாய்
மதிவா ணுதல் வள்ளியை யல்லதுபின்
றுதியா விரதா சுரபூ பதியே.

நீலகண்டீய உரை விளக்கம் :—மதிவாள் நுதல் = சந்திரன்ஒளிபோன்றுஒளியமைந்தநெற்றியினையுடைய! வள்ளியை அல்லாது = வள்ளியம்மையை யல்லாது! பின் துதியாத விரதா = வேறு யாவரையும் = தோத்திரம் பண்ணுதுள்ள மனம் பொறிகள் ஒருமையுற்ற ஒழுக்க சீலனே! சுரபூபதியே = தேவசேனாதிபதியே விதிகாணும் உடம்பை விடா வினையேன் = நான்முகனாற் படைத்துள்ள உடம்பினில் ஆன்ம புத்தியை விடாத வினையேனாகிய நான்! கதிகாண = நிரதிசய பரமானந்த வடிவமாயுள்ள உண்மை நிலையையடைய! மலர்க்கழல் என்று அருள்வாய் = உண்மை ஞானத்தினையே சொரூபமாயுள்ள தாமரை மலர் போன்ற திருவடிகளை என்று தந்தருள்வாய்!

விசேட உரை:—உடம்பைவிடா வினையேன் என்றது உடம்பின் கண் உள்ள ஆன்ம மதியை விடாத தீவினையேன் என்றார். அப்பற்றொழிதலே கதி=நிரதிசய பரமானந்த சொரூப நிலையாம்! அதனையடைய உண்மை ஞானமேயல்லாது வேறு நெறி இல்லையாகலான்! மலர்க்கழல்=உண்மை ஞானத்தினை என்று அருள்வாய் என்று குறிப்பித்ததாம்! என்று உணர்க. அற்றது பற்றெனில்! உற்றது வீடு எனவும்,

"யான் எனதென்னும் பற்றறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்!"

என்றும் நம் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழியாம்!

36. நாதா குமரா நமவென்று அரனார்
ஓதா யெனவோ தியதெப் பொருள்தான்
வேதா முதல் விண்ணவர் சூடுமலர்ப்
பாதா குறமின் பத சேகரனே.

நீலகண்டீய உரை விளக்கம் :—நாதா = யாவர்க்கும் தலைவனே! குமரா நம வென்று=ஓம் குமாராயநம: வென்று தியானம் செய்து! அரனார் ஓதா என=சிவபிரான் பிரணவப் பொருளை உபதேசமாக அருள்வாய் என்றிரப்ப! ஓதியது எப்பொருள் = அப்பெருமானுக்கு அருள் புரிந்தது எப்பொருளோ! வேதா முதல் விண்ணவர்சூடும் மலர்ப்பாதா=பிரமன் முதலிய தேவர்கள் யாவரும் தங்கள் முடி மீது சூடும் மலர் போன்ற சீர்பாதங்களையுடையோனே! குறமின்பாத சேகரனே=வேடர் குலத்துதித்த வள்ளியம்மையின் அடிகளை முடிமேற் கொள்வோனே!

விசேட உரை:—தான் = அசை! விண்ணோர்கள் முடிமீதணியும் அடிகளையுடையபெருமான் ஊடல்தணித்தற் பொருட்டே வள்ளியம்மையின் அடிகள் முடிமேற் கோடல் மரபன்றாயினும் இவன் இங்ஙனம் கொள்ளானேல் இல்வாழ்க்கை நிகழாதாகலின் அது காட்டியவாறென்க! உதாரணம்,

"தென்பாலுகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்!
மெண்பால் உகந்தாள் பெரும் பித்தன்காணேடி!
பெண்பால் உகந்திலனேல் பேதா இருநிலத்தோர்
விண்பால் யோகெய்தி வீடுவர் காண்சாழலோ!"—என்றார்.

வாதவூரடிகள் நாதாவெனக் கூறியது!

அக்கமலன் விளம்பியவா நம்மையும்
நம்புதல்வனையும் அன்றேமான
மிக்க புகழ்ச் சுருதி எலாம் பிரணவத்தின்
பொருளாக விளம்புமன்றே!
என்பதனாலறிக குமாராயநம!
கௌமார சடாக்ஷர மந்திரம் என்ப!

இதனை! ஆறெழுத்தடுக்கிய அருமறைக்கேள்வி என்றதனாலுமுணர்க. எப்பொருள் என்றது உரைமனமிறந்த உண்மை அறிவானந்த சொரூபமேயாகலின், அதனை

அறிபடும் பொருள் நீயல்லை அறிபடாப் பொருணீயல்லை
அறிபொளாகும் உன்னை அநுபவித்தறிவாய் நீயே!

என்று கூறுவதால் அறிக!

37. கிரிவாய் விடுவிக் ரமவேலி றையோன்
பரிவா ரமெனும் பதமேவலையே
புரிவாய் மனனே பொறையா மறிவா
லரிவா யடியோடு மகந் தையையே.

நீலகண்டிய உரை விளக்கம்:—கிரிவாய் விடு விக்ரம வேல்=மலைமேல் பிரயோகித்த போர் வலிமிக்க வேற் படையினையுடைய! இறையோன் பரிவாரமெனும் பதம் மேவலையே=யாவற்கும் தலைவனுகிய பெருமானது அடி யார் கூட்டத்தில் கூடும் பதவியை அடை தலையே! புரிவாய் =அடைவாய்! மனனே =நெஞ்சமே! பொறையாம் அறி வால்=சாந்தமாயுள்ள உண்மை ஞானத்தால்! அடி யோடும் அகந்தையை அரிவாய்=வேருேடு அறியாமை யால் உண்டாம் அகந்தையைக் கெல்லி எறிவாய்!

விசேட உரை:—அகந்தை என்பது தேகான்ம மதி யினை அது அறியாமையாற் ருேன்றுவன வாகலான் பொறையாமறிவால் அரிவாய்! என்ருர். கிரிவாய் என்பது கிரௌஞ்சமலை, இறையோன் பரிவாரமெனும் பதம் என்றது போலவே, வாதவூரர் கூறியது.

''உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீ இருத்தி
அடியேன் நடுவுள் இருவிரும்
இருப்பதானுல் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்
புரியாய் பொன்னம்பலத்து எம்
முடியா முதலே என்கருத்து முடியும்
வண்ணம் முன்னின்றே!

என்றும் நாள் நாளும் ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வி,

மெய்த்தவர் குழாத்தொடும் வைக இத்திறம்!
உடனீங்களவும் உதவிக் கடவுள்'நின்

பெரும்பதமன்றி யான் பிறிதொன்று!
இரந்தனன் வேண்டினும் ஈந்திடாததுவே!

எனவும் கூறியது! குமர குருபரர் வாக்காம் என்றறிக.

38. ஆதாளி யையொன் றறியே னையறத்
தீதாளி யையாண் டதுசெப் புமதோ
கூதாள கிராதகுலிக் கிறைவா
வேதாள கணம் புகழ் வேலவனே.

நீலகண்டீயஉரை விளக்கம் :-- ஆதாளியை = அறிவின்மையால் ஆளப்படுபவனும்! (அதனால்) ஒன்று அறியேனை = கற்க வேண்டுவன கற்று அறிய வேண்டியவற்றை அறியாதவனை! அறத்தீதாளியை = அதனால் முழுதும் தீமையால் ஆளப்படுபவனுமாகிய என்னை! ஆண்டது செப்புமதோ = உண்மை ஞானத்தினைத் தந்து, ஆட்கொண்டருளிய முறைமை சொல்லும் பான்மையதோ! அன்று கூதாளகிராத குலிக்கு இறைவா = கூதாளமலர் அணியும் வேடர் குலத்தவராகிய வள்ளியம்மையார்க்குத் தலைவனே! வேதாள கணம் புகழ்வேலவனே = பூதகணங்களால் போற்றிப் புகழ்ந்துரைக்கும் வேற்படையை திருக்கரத்தேந்திய பெருமானே!

விசேட உரை:—தீது = காமம் வெகுளி மயக்கமென்னும் முத்தோஷங்களாம், குலத்தில் உதித்த வளைக்குலி என்றது இங்கு அக்குலத்தில் வளர்ந்தமை கருதி கூதாளம் = குறிஞ்சி நிலக்கருப் பொருள்! ஆதமீறு தொகுத்தலாய் நின்றது! ஒன்று = ஆகுபெயர்! முற்றும்மை விகாரத்தாற்றொக்கது! வேதாளகணம் புகழ்தலென்றமை! முருகப் பெருமானுக்கு, தூசிப்படையாயுள்ளது அதுவேயாகலின்! குலிக்கு = ஆறனுருபு நான்கன் உருபாய் உயர்திணையாகலிற்றிரிந்து நின்றது இதனை!

"அது வென்வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம் வருமே!"

என்றதனுற் காண்க.

39. மாவேழ் ஜனனங் கெடமாயை விடா
மூவேடணையென்று முடிந்திடுமோ
கோவே குறமின் கொருதோள் புணருந்
தேவே சிவசங்கர தேசிகனே'

நீலகண்டிய உரை விளக்கம்;—மாவேழ் சனனம் கெட =பெரிதாகிய இவ்வெழுவகைப் பிறவிகளும் அதனல் வரும் துன்பமும் ஒழிய! மாயை விடாதமூ ஏடணே =அறியாமையாற்றொடர்ந்துள்ள மனைமக்கள் செல்வம் என்ற மூன்றிடத்துள்ள விருப்பமானது! என்று முடிந் திடுமோ=எக்காலத்து உனது உண்மை ஞானம் பெற்று அதற்கேதுவாகிய அறியாமை அழிந்து அது நீங்குமோ அறியேன்! கோவே=யாவர்க்குந் தலைவனே! குறமின்கொடி தோள் புணருந் தேவே=வேடர் குல மகளார் மின்னர்க் கொடி போன்ற வள்ளியம்மையாரது புயங்களைத் தழுவும் தெய்வ நாயகனே! சிவசங்கர தேசிகனே! எவ்வுயிர்களுக்கும் சுகத்தையளிக்கும் சிவ பெருமானுக்கு முடிபொருள் உதவிய ஞான பானுவே!

விசேட உரை;—மூவேடணை=மனைவி, மக்கள், செல் வம் என்று மூவித விருப்பங்கள்! இது அறியாமையால் வந்தது, இது விவேகாதி சாதனங்களால் உண்மை ஞானத்தினையடைந்த பின்னர் நீங்குமாகலின் மூவேடணை என்று முடிந்திடுமோ என்றூர்! ஏழ்சனனம் =தேவர்! மநுடர்! பசு! பட்சி! ஊர்வன! நீர்வாழ்வன! தாவரங்கள் என்றுள்ளதாம்! மாயை விடா மூவேடணை என்பது கைவல்யம் கூறும் அது.

"அதனை இன்னதென்றுரைத்திடப் படாமையால்
அவாச்சிய வடிவாகும்
இதுதனக்குளது உடலியான் உலகு
மெய்யெனுமவர் உடையோர்கள்
கதையிலாத பொய்வந்தத்தப்படி என்று
கண்டபேர் இலைமைந்தா
விதனமாயையேன் வந்ததிப்படியென்றுற்
புத்தி விசாரமற்றதனாலே

என்று கூறியது மாயையின் இலக்கணம் எப்படி! அது எங்குள்ளது! அது எங்கிருந்து வந்தது! அது என்னிடத்து வருவான் ஏன் என்ற நாலு வினாக்களுக்குப் பதில் உரைத்த அமுதத் துளிகள்! என்பதறிக.

40. வினையோ டவிடுங் கதிர்வேல் மறவேன்
மனையோ டுதியங் கிமயங் கிடவோ
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதனோ டுதிரிந் தவனே.

நீலகண்டீய உரை விளக்கம் :—வினை ஓடவிடும்=நல்வினை தீவினைகள் என்னும் இவற்றின் காரணமாயுள்ள அறியாமையைக் கெடுக்கும்! கதிர்வேல் மறவேன்= ஞானார்த்தமாய கிரணங்களை வீசும் சூரியனான வேற்படையினை என்றும் மறவாத நான்! மனையொடு தியங்கி மயங்கிடவோ=மீண்டும் இவ்வுடம்புடனே கூடி வாழும் வாழ்க்கை காரணமாக மனையாதியருடன் கலக்கத்தினை யடைந்து வருந்தி மயக்கத்தினையடைவது தகுதியாகுமா! சுனையோடு அருவித் துறையோடு பசுந்தினையோடு இதணோடு திரிந்தவனே!=சுனையினிடத்தும், அருவிகள் பாயும் ஆற்றினிடத்தும் பசிய தினைப்புனத்தின் இடத்தும் பரண் இடத்தும் ஓடித்திரிந்த பெருமானே!

விசேட உரை :—பேய்த்தேரினது தோற்றமானது நீர்போன்ற தோற்றமேயன்றி நீர் அன்று இது கானலே என நிச்சியம் செய்தபின்னும் அது நீர் போன்றே தோற்றும்! இது போன்று நாமரூபமாயுள்ள சகலப் பிரபஞ்சமும் தனுகரணங்கள் யாவுமே கானல் நீரே போன்று இது முழுதும் பொய்மையே என்று நிச்சயம்செய்த போதினும் பிராரத்தம் முடியும் வரை அவை தோற்றியேதான் தீருமென்றுணர்க இதனைப் பாதிதானு விருத்தி என்பவர் வடநூல்வல்லுநர்! உதாரணம்:

"கானலை நீர் என்று ஓடிக்கண்டவர்க்குத் தீர்ந்தபின்னும்
வானுலவு நீராகி வயங்குதல் போல் என்றவரோ"

என்றும் ஸ்ரீ கண்ணபிரானுங் கூறியுள்ளார்! என்பதுங் காண்க!

41. சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனுர் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயில் வாகனனே.
யோகா சிவ ஞானுப தேசிகனே.

நீலகண்டீய உரை விளக்கம் :—நமனுர் கலகஞ் செயுநாள் = கூற்றுவரது தமர்கள் என்னை நலிவுறுங் காலத்தில்! சாகாது எனையே சரணங்களிலே காகா = இவ்வுடம்பழியாமுன் சிதாபாச வடிவமாயுள்ள என்னை நிரதிசயபரமானந்த சொரூபமாயுள்ள உனது மலரடியில் அபேதமாம் வண்ணம் செய்து காத்துக் கொள்வாய்! வாகா = வெற்றியையுடையானே! முருகா = மாருத இளமையுடையானே! மயில் வாகனனே = மயிலை வானமாகவுடையவனே! யோகா = மனம் பொறிகள்

தன்வயமாக்கிய வீரனே! சிவஞான உபதேசிகனே = சிவபெருமானுக்கு நான் மறையின் முடிபொருளான பிரணவத்தின் வாச்சியமாயுள்ளதான பெரிதுக்கெல்லாம் பெரிதாயுள்ள பிரஞ்ஞான கனப் பிரஹ்மத்தை உணர்த்திய ஞானபானுவே!

விசேட உரை:—நமனுர் கலகஞ் செயும் நாள் காகா வென்றது போன்றே தேவராய்!

"அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரணமாக
வந்த காலன்றன் ஆயிர் அதனை வவ்விணுய்க்கு
உன்றன் வன்மை கண்டு அடியேன்
எந்தை நீ எனை நமன்தமர் நலியின் இவன்
மற்று என் அடியான் என விலக்கும்
சிந்தையால் வந்து உன் திருவடியடைந்தேன்
செழும் பொழில் திருப்புன் கூர்உளானே"

என்றும் சாகாது எனையே என்றதற்குதாரணம்

"பொன்னுர் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றி [செய்யும்
என்னுவிகாப்பதற் கிச்சையுண்டேல் இருங்கூற்று அகல
மின்னும் மூவிலைச் சூலம் என்மேற் பொறி மேவுகண்டாய்
துன்னு கடந்தையுள் தூங்கானைமாடச் சுடர்க்கொழுந்தே!

என்று சொல் மன்னரும் கூறுவது காண்க.

42. குறியைக் குறியா துகுறித் தறியு
நெறியைத் தனிவேலை நிகழ்த்திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியாமை யுமற் றதுவே.

நீலகண்டிய உரை விளக்கம்:—குறியைக் குறியாது குறித்து அறியும் நெறியை = அகண்ட பரிபூரண அத்வைதமாயுள்ள சிதாகாய வடிவமாயுள்ள வத்துவை நினைப்பும் மறப்பும் இன்றிய நனவிற் சுழுத்தி நிலை நின்று கேவலங் கடந்த துரிய வடிவமாயுள்ள கூடஸ்த வடிவத்தில் நிலைபெறும் உண்மை ஞானத்தினை! தனி வேலை நிகழ்த்திடலும் = ஒப்புயர் விகந்த வேற்படையை திருக்கரத்தில் ஏந்திய பெருமான் = குறிப்பினால் உபதேசித்தலும்! உலகொடு செறிவற்று = உலகின் கண் உள்ள யான் எனதென்னும் பாசங்கள் ஒழிந்து! உரை சிந்தையும் அற்று = வாக்மௌனம் காஷ்ட மௌனம் கரண மௌனம், மனோமௌனம் ஆகிய அசம்பிரஞ்ஞாத சமாதிநிலையையடைந்து! அறிவு அற்று அறியாமையும் அற்றது = சுவயம்பிரகாச வடிவ ஆன்மாவை மறைத்துள்ள அறியாமையையுங் கெடுத்து ஞானமும் அதனோடு சவம சுடுதடி போன்று அழிந்துள்ளன.

விசேட உரை:—குறியைக் குறியாது குறித்து அறியும் நெறி என்பதற்கு உதாரணம் கைவல்யம்:

"களங்கம் அற்ற கண்ணாடி தன் முன்வேறோர்
களங்கமற்ற கண்ணாடி காட்டும்போது
விளங்கியதன் மயமாகி அபேதமாகி விகற்ப
மின்றி நிருவிகற்ப மானாற்போல்
அளந்தறியப்படா விபுவாய்ச் சத்தாய்ச் சித்தாய்
ஆனந்தமாம் பிரஹ்மத்தைக்கியமான
உளந்தெளிந்தபடி இருந்தால் உலகமெங்கே
உலைவெங்கே என்று சங்கை ஒழித்திடாயே!

என்றும் அறிவற்று அறியாமையும் அற்று என்பதற்கு உதாரணம்:

''வீடதாம் பரிபூரண சொரூபத்தில்
விருத்தி ஞானமுங்கூடி
சேடமாகினுல் அகண்டமாம்
அநுபவசித்தி எப்படி என்ருல்
சாடி நீர்மண்ணைப் பிரித்த தேற்ரும்
பொடிதானும் மண்ணெடு மாயும்
ஊடிஞானமும் அறிவிலாமையைக் கெடுத்து
ஒக்கவே கெடுந்தானே!

என்றும், கூறும் உரை சிந்தையுமற்றுள்ள நிலை 'கேவல நிருவாண நிலை' என்றுணர்க. தனை இருந்தபடி இருந்து காட்டிச் சொல்லாமற் சொன்ன நிலை அதனை நினையாமல் நினைந்து பவத்தொடக்கு வெல்லும் நெறி என்றறிக.

43. தூசா மணியுந் துகிலும் புனைவா
ணேசா முருகா நினதன் பருளா
லாசா நிகளந் துகளா யினபின்
பேசா வனுபூதி பிறந் ததுவே.

நீலகண்டீய உரை விளக்கம்:—தூசு ஆம் அணியும் =தூய்தான ஆபரணங்களையும்! துகிலும்=பட்டாடைகளையும்! புனைவாள் நேசா=அணிபவ்ளாகிய வள்ளியம்மையார்க் கன்பனே! முருகா=மாருத இளமையையுடையோனே! நினது அன்பு அருளால்=உனது அன்பினையும்உண்மைஞானத்தினையும் கருவியாகக்கொண்டு ஆசா நிகளம் துகள் ஆயினபின்=ஆசையாலுண்டாம் யான் எனதென்னும் பற்றுக்களைப்பொடியாக்கிய பின்னர்! பேசா அநுபூதி பிறந்தது=நனவினிற் சுழுந்தி நிலையாகி! கர்ம கர்த்துருபாவங் கழன்றதோர் அநுபவ ரூபமாயுள்ள நிலையுண்டாயது!

விசேட உரை:— இதற்குதாரணம் கைவல்யம்.

"தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப்பாமல்
பஞ்சகோசமுங் கடந்து பாழையுந் தள்ளியுள்ளிற்
கொஞ்சமாம் இருப்பும் விட்டுக் கூடஸ்தன்பிரஹ்மமென்னும்
நெஞ்சமும் நழுவியொன்ருய் நின்ற பூரணத்தைக் கண்டான்',

என்றும்,

அநுபவானந்த வெள்ளத் தழுந்தியேய கண்டமாகித்
தநுகரணங்களாதி சகலமும் இறந்து சித்தாய்
மனது பூரணமாய்த் தேகமான சத்குருவுங்காண
நனவினிற் சுழுத்தியாகி நன்மகன் சுபாவமானுன்!

என்றுங் கூறும்,

அற்றது பற்றெனில்! உற்றது வீடு, என்றும் நூல்களிற் கூறுகின்றமையால் ஆசாநிகளம் துகளாயினபின் பேசாவநுபூதி பிறந்து என்றும் அடிகள் கூறியதாம்.

44. சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமும் கமழுங் கழலே.

நீலகண்டீய உரை விளக்கம் :—சாடும் தனிவேல் முருகன்=பகைவரை அழிக்கும் ஒப்புயர் விகந்த வேற்படையை திருக்கரத்தில் யேந்திய விளமை மாருத தன்மையையுடையோன்! வீடும் = நிரதிசயானந்த பரிபூரணமாயுள்ள துரிய நிலையிலும்! சுரர்மா முடி= வானவர்களது முடியின் மீதும்! வேதமும் = வேதத்தின் முடிபொருளும்! வெங்காடும்=வெம்மையாகிய காட்டின் கண்ணும்! புனமும்= தினைப்புனங்களிலும்! கமழும்= நடந்தருளின! கழலே=உண்மை அறிவானந்த வடிவ

மாயுள்ள பாதங்களையே! சரணம் சூடும்படி=சரண் எனப்பொருந்தி நிலைபெறும் படி! தந்தது=குறிப்பால் உணர்த்தியது! சொல்லுமதோ = வாக்கால் கூறத் தக்கதோ! (இலக்கண விருத்திக்கே சொல்லுந் தன்மை யுளதேயலது) (வாக்கிய விருத்திக்கெட்டாததே) யென் றுணரவும்.

விசேட உரை :—தந்தது சொல்லுமதோ! என்றது கைவல்யம் கூறும்.

''வாக்கியந் தனக்கெட்டாது வத்து வென்றுரைத்தவேதம்
வாக்கிய விருத்தியா லவ்வத்துவைக் காட்டிற்றன்றோ!
வாக்கியங்களிலே மானமாவதே தென்றோயாகில்
வாக்கியமிரண்டும் மெய்யே மறைகள் பொய்யாது கேளாய்.''

என்றும்!

''தன்பதியல்லாப் பேர்கள் தமை அல்லன் அல்லன் என்றாள்
அன்பனைக் கேட்ட நேரம் அவள் வெட்கி மௌனமானாள்
என்பதுபோல நீக்கி இதுஅன்று இது அன்று எனச்சேடித்த
பின் பரப்பிரஹ்மம் தன்னைப் பேசாமற் காட்டும் வேதம்''

என்றுங் கூறுவதுணர்க! சரணம் சூடுதல்=பிரதி பிம் பித்த சீதாபாசன் பிமப வடிவமாயுள்ள பரம்பொரு ளோடு கலத்தலென்றே அறியவும்!

45. கரவா கியகல் வியுளார் கடைசென்று
இரவா வகை மெய்ப் பொருளீ குவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோக தயாபரனே.

நீலகண்டீய உரை விளக்கம் :—கரவு ஆகிய கல்வியு ளார்=உண்மைப் பொருளை மறைத்து மாறாகக் கூறும் கவிஞர்களது! கடை சென்று=தலைவாயிலிற் சென்று! இரவா வகை=அப்பொய்மையாளர்களிடத்து கல்வியை

விரும்பி யாசியாதவண்ணம் மெய்ப் பொருள் ஈகுவையோ=உண்மை ஞானத்தால் நிரதிசயபரமானந்த வடிவமாயுள்ள ஆன்மாவை இன்னதெனக் குறிப்பால் உணர்த்தியருள் புரிவையோ! குரவா=ஞானபானுவே! குமரா=மாருத இளமையுடையவனே! குலிச ஆயுத= வச்சிரப்படையையுடையோனே! குஞ்சரவா=யானையிற் பவனிவரும் பெருமானே! சிவயோக=சிவராஜயோகத்தின் பொருளானவனே! தயாபரனே=கிருபைக்கிருபிடயானவனே!

விசேட உரை:—கரவாகிய கல்வி=அறிவுநூல் கல்லாது உலக நூல் என்று கூறியதால் இழுக்கன்று உதாரணம்:

"அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லாது
உலகநூல் ஓதுவதெல்லாம்=கலகல
கூஉம் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒம் துணையறிவாரில்!"

என்று கூறும் இதனுல் இவர் கல்வி பயனுடையனவாகா இதனுள் மெய்ப்பொருள் மறைந்துபொய்ப் பொருளே யுள்ளதாகலின் அது கரவாகிய கல்வியாயிற்று. சாமிக்கும்! சாமியாயினமையின் குரவா! என்று கூறியுள்ளார். பிணிமுகமென்னும் யானைமேற் பவனி வருவாளுதலின் குஞ்சரவா என்றுங் கூறினுர்! எல்லாவுயிர்களிடத்தும் கருணையையுடையான் ஆதலின் தயாபரனே என்னும் குறிப்பென்றுணர்க!

46. எந்தா யுமெனக் கருடந் தைபுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே யுமையாள்
மைந்தா குமரா மறை நாயகனே.

நீலகண்டீய உரை விளக்கம்:—எந்தாயும் எனக்கு அருள் தந்தையு நீ=எமக்கு மாதாவும் அடியேங்கட்கருளும் பிதாவும் நீயேயாகும்! (ஆகலின்) சிந்தாகுலம் ஆனவை தீர்த்து எனையாள் =சித்தத்தின் கண் உள்ள துன்பத்தினை உண்மை ஞானத்தால் அது தோன்றற்கு ஏதுவாகிய அறியாமையைக் கெடுத்து எம்மை (நிரதிசய வின்ப வடிவமாயுள்ள நின்னோடு அபேதமாம் வண்ணம் செய்தருள்வாய்! கந்தா= ஆறுருவும் ஓருருவாயவனே! கதிர்வேலவனே=ஒளியைக்காலும் வேற்படையை திருக்கரத்தில்யேந்தியவனே! உமையாள் மைந்தா=உமையம்மைக்கு ஒப்புயர் விகந்த குமரனேயாய் வந்துள்ளவனே! மறைநாயகனே=வேதங்கட்கு அதன் உட்பொருளாய் விளங்கும் உண்மை அறிவானந்த சொரூபமாயுள்ள பரம்பொருளே!

விசேட உரை:—சித்த ஆகுலம் = சிந்தாகுலமென வந்தது. சிந்தாகுலமால் நவை எனக்கொண்டு வருத்தத்தைத் தரும் பெரிய குற்றமென்றுரைக்கினும் அமையும்! தாயுந்தந்தையும் நீ என்றது சத்தி தனக்கு வேறுகாமையின் அதாவது அக்கினியிற் சூடுபோல அபின்னமேயாகலின்! இது போன்றே மாணிக்கவாசகரும் அம்மையே அப்பா என்றுளார். சொல் மன்னரும் அப்பனீ அம்மைநீ என்றே கூறியதின் கருத்தினை மேலவர்பாற் சென்று வருந்திக் கேட்டுக் கொள்வது நலம். திருச்சியில் எழுந்தருளியுள்ள தாயுமானுர்! சிவவழிபாடு செய்து வந்த ஒரு அடியவட்காக அவளது தாய் போன்று உருக்கொண்டு சென்று அவளது பிரசவநிலைக்குதவியதும்! பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ எனத் தேவாரத்தினுங் காணப்படுகின்றது ஆண்டுக் காண்க!

47. ஆறாறை யுநீத்த தன்மேோ னிலையைப்
பேறா வடியேன் பெருமா றுளதோ
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா வுலகங் குளிர்வித் தவனே.

நீலகண்டீய உரை விளக்கம்:—ஆறாறையும் நீத்து= முப்பத்தாறு தத்துவங்களையும் ஆன்மப் பொருளன்றென நீக்கி! அதன்மேல் நிலையைப்பேறா அடியேன் = அதற்குமேற்பட்டதாகிய கேவல நிருவாண தசையையே! பேறா = நிரதிசயானந்தமே பெறும் பேருகுமென அடியேன் பெறுமாறுளதோ=யான் உண்மை ஞானத்தால் அடையுந் தன்மை உண்டாமோ! சீறாவரு சூர்= சீறி வருகின்ற சூரபதுமனை! சிதைவித்து=வேற்படையாற் கொல்வித்து! இமையோர் கூறா உலகம்=வானவர்களின்பாகமாகிய சுவர்க்கலோகத்தை! குளிர்வித்தவனே =அவர்களது தாபத்தை தண்ணளியால் தணிப்பித்வனே!

விசேட உரை:—ஆறாறு என்பது தொகைக் குறிப்பு =அது மூலப்பிரகிருதியின் காரியமாயுள்ள மூன்று குணங்களால் உண்டான தூல சரீர தத்துவங்கள் ஆறும்! ஞானேந்திரியம் ஐந்து அந்தக்கரணம் ஐந்து பிராணுதிவாயுக்கள் ஐந்து கருமேந்திரியம் ஐந்து அவித்தையும் அதிற்பிரதி பலித்துள்ள சிதாபாசனுகிய இரண்டும்! மாயையும் அதிற் பிரதிபித்த மாயாப் பிரதி பிம்ப ஈசுரனும் இரண்டும் பஞ்ச பூதங்கள் ஐந்தும் பிரஹ்மம் ஒன்றும் ஆக முப்பத்தாறும் ஆம் அவற்றுள் மேற்பட்ட நிலை பெரிதுக்கெல்லாம் பெரிதாகிய நிலையாம் அதுவே பிரஹ்மமாம் என்று சொல்லுவர். பெரியோர்கள் அதனின் மேலாய செல்வமின்ரும் ஆகலின் பேறா என்ரூர். அது விவேகாதி சாதன சம்பன்னரே

அதனையடைதற்குரியோரே யன்றி மற்றையோர்க்கு அது அரிதாகலின் அடியேன் பெறுநாள் உளதேம் என்றுங் கூறினர். பானுகோபனுல் இந்திரனது உலகா தீக்குணவாகியதால்! அதனுல் சூர்ப்பகையைத் தடிந்து மீண்டும் தேவர்கள் பெறுமாறு செய்தலின் குளிர்வித்த வனே என்றுங் கூறினர்! அடிகள்!

48. அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும் வேலவனே.

நீலகண்டீய உரை விளக்கம்:–செறிவு ஒன்று அறவந்து =யான் எனதென்றுமுண்டாம் உலகப்பற்றுக்கள் ஒழியு மாறு! இருளே சிதைய=அதற்கேதுவாகிய அறியாமை யாகிய அந்த காரம் நீங்க! வெறிவென்றவரோடு உண்மை ஞானத்தால் அம்மயக்கத்தினின்றும் நீங்கிய மனம்பொறிகளை வென்றுள்ள வீரர்களோடும்பொருந்தி நீங்காத! வேலவனே=திருக்கரத்தில் வேற்படையை உடைய பெருமானே! அறிவொன்று அறநின்று= சுட்டறிவொழிந்து அதற்காதாரமாகிய கூடஸ்தவடிவப் பிரஹ்மத்தில் நிலைபெற்று நின்று! அறிவார் அறிவில் =அப்பரிபூரண பரமானந்த வடிவமாயுள்ள பரம் பொருளே. கூடஸ்த வடிவ ஆத்மாவென அறிந்துள்ள வரது உண்மையறிவானந்த வடிவமாயுள்ள அறிவு சொருபத்தை அபேதமாக நீரின் கண் கலந்த உப்பே போனறு வியாபித்து நின்றுள்ள! பிரான் அலையோ= நீக்கமறநிறைந்துள்ள பரிபூரணமாயுள்ள பரம்பொருள் நீயேயன்றே! ஆகலின் என்னை நீ காத்தருள்வாயாக!

விசேட உரை:––ஆகலின் என்னைக் காத்தருள் என்பது குறிப்பெச்சம்! செறிவு ஒன்றற என்பதை :

'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப்படும்!'' என்றும்,

தமிழ் மறை மொழியும்

''பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு!''

என்றும்! கூறும் ஆகாயம் போன்று எங்கணும் நீங்கமின்றி நிறைந்துள்ள சிதாகாச வடிவமாயுள்ள பரம் பொருளேயே பற்றிக் கொள்க. அப்படிப் பற்றிக்கொள்வதுயாதின் பொருட்டு எனின்! இவ்வுடம்பின் கண் வைத்துள்ள யான் என்னும் பற்றும் மனையாதியரிடத்துள்ள எனது என்னும் பற்றும் முற்றுமொழிய. அப் பொருளேப் பற்றுக, என்ற குறிப்பினையே,

''பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு!''

என்று கூறும் உம்பரும் பரவும் ஒருதமிழ் வேதம் என்று உணர்க!

49. தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையுங் கிர்பைசூழ் சுடரே.

நீலகண்டீய உரை விளக்கம்: —தன்னம் தனி நின்றது =ஏகம் அத்துவிதீயம். என்னும் சுருதிக்கும்! சகல கேவலங் கடந்துள்ள துரிய வடிவமே ஆத்மா என்ற யுக்திக்கும்! கூடஸ்த வடிவ ஆன்மாவே அப்பரம் பொருள் என அறிந்த அநுபவத்திற்கும் ஒப்ப நின்ற கேவல நிலையை! அறிய=மனம் வாக்கியங்களால் அறியும்படி! இன்னும் ஒருவர்க்கு இசைவிப்பதுவோ=மல

விட்சேப தோஷங்களற்ற மனத்தாலும் இலக்கணு விருத்தியாலுமல்லாமல் மூவித தோஷமாய மனத்தினையுடைய யெம்மனோர்க்கும் வாக்கிய விருத்தியாலும் உரைக்கும் பான்மையதோ! மின்னும் கதிர்வேல் விகிர்தா = ஒளியை வீசும் வேற்படையைத் திருக்கரத்தில் ஏந்திய இறைவனே! நினைவார்க்கு = உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள உனது உண்மை நிலையை உள்ளூன்றித் தியானிப்பவரது! சின்னங்களையும் கிருபை சூழ் சுடரே = துன்பங்களுக் கேதுவாகிய அறியாமையாகிய இருளை உண்மை ஞானத்தால் ஒழிக்கும் கருணையாகிய கதிர்கள் நெருங்கிய ஞானபானுவே!

விசேட உரை:—தான் என்பதை ஆன்மாவெனக் கொண்டு அதனையறியுமாறு இன்று ஒருவர்க்கு! உண்மை ஞானத்தால் குறிப்பில் உணரத்தக்கதே யல்லாமல் வாக்கால் உரைக்கும் பான்மையதோ என்றும் பொருள் கொள்ளலாம். தன்னந்தனி என்றது ஒரு பொருட்பன்மொழி! முக்கரணங்களாலும் அறிவிக்கவோ அறியவோ முடியாது என்பதே கருத்தாம்,

50. மதிகெட் டறவா டிமயங் கியறக்
சுதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திரஞா னசுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே.

நீலகண்டீய உரை விளக்கம்:-மதிகெட்டு= அறியாமையால் என் சித்தம் இடிந்து! அறவாடி மயங்கி= முற்றும் சோர்ந்து மயக்கத்தினையடைந்து! அறக்கதி கெட்டு= ஆத்மாவை விசார வாயிலாலடையும் அறநெறி ஒழிந்து அவமே கெடவோ கடவேன் = மநுடப் பிறவியால் வரும் பயனின்றியே! அழிந்து தோன்றும் பிறவியின்

னும் அழுந்துவேனே! நதிபுத்திரா = கங்காதேவியின் திருக்குமரனே! ஞான சுகாதிப = நிரதிசய பரமானந்தத்தினை தரும்! தேவசேனாதிபதியே! அதிதிபுத்திரர் வீறு அடு சேவகனே = அதிதிபுத்திரர்களாகிய. அவுணர்களுடைய யான் யெனதென்னும் செருக்கினை அறவே, ஞானசக்தி சொரூபமாயுள்ள வேற்படையால் அழித்த வெற்றியையுடைய வீரனே

விசேட உரை:—ஞானசுக அதி பவத்திதி புத்திரர் எனவுங் கொண்டு ஞானவின்பமே எனவும்! மிக்க பாதகம் புரிந்ததைத்தியார் எனவும் பொருள் கூறுவாரும் உளர், எல்லாம் வல்ல பரம்பொருளாயுள்ள பெருமானையே யடைதலின் எவ்வகையாய தீயவினைகளும் நீங்கிவிடுமென்பார்! அத்திதிபுத்திரர் வீறு அடுசேவகனே எனவும் அடிகள் குறிப்பித்துள்ளார்! என்க!

51. உருவாய் அருவாய்! உளதாய் இலதாய்
மருவரும்.மலராய்! மணியாய் ஒளியாய்!
கருவாய் உயிராய்க்! கதியாய் விதியாய்!
குருவாய் வருவாய்! அருள்வாய் குகனே!

நீலகண்டீய உரை விளக்கம்:—உருவாய் அருவாய் = நாமரூப காரியமாயுள்ள சகசீவபரங்களும் அதற்குக் காரணமாயுள்ள மாயையும்! உளதாய் இலதாய் ॥ என்றும் மாறுபடாச் சத்ரூபமாகியும் அதற்கெதிர் மறையான மலடிமகன் போல அசத்தாயும்! மருவாய் மலராய் = மணமாகியும் மலர் ஆகியும்! மணியாய் ஒளியாய் = மாணிக்கமாகியும் அதன்கண் உள்ள ஒளிவடிவமாகியும் கருவாய் உயிராய் = அறியாமையாகியும் அதன் கண் உள்ள ஆபாச வடிவ சீவரூபமாகியும்! கதியாய்விதியாய் = நிரதிசயானந்த வடிவமாயுள்ள ஆத்ம சொரூபமாகி

யும்! அதனை அ'பேதமாக அறியும் தன்மையாய! மலவிட் சேபதோஷமின்றிய மதியினையும் தந்து! குருவாய் வரு வாய்=உண்மை ஞானத்தினை உபதேசஞ் செய்தருளும் ஸ்ரீ ஞானபானுவாயும் தோன்றி வந்து அருள் புரிவா யாக! அருள்வாய் குகனே=உயிர்கள் தோன்றவும் ஒடுங் கவும் ஏதுவாயுள்ள இருதய கமல வடிவ குகையில்துரிய வடிவ சிதாகாய வடிவமாயுள்ள சாமான்ய வடிவ பரம் பொருளாய் விளங்குபவனே! (அதனால்) குகன் என்ற நாமம் உடையோனே!

விசேட உரை:—தேசகால வஸ்து பரிச்சேத ரகித மாயுள்ள பொருள்! எங்கணும் நீக்கமின்றிப் பரிபூரண மாய் உள்ளதால்! தேசத்தினாலும்! என்றும் உள்ள தாகலின் காலத்தினாலும! எல்லாந்தன் வடிவமாயுள்ள தாகலின் வஸ்துவினாலும் அந்தமில்லாததேயாகும். எங்ஙனம், நாமரூபமாயுள்ள பொருள்கள் ஓரிடத் துள்ளவை பிரிதொரு இடத்தில் இல்லாமையால்! தேசத்தாலந்த முடையதாம்! ஒருகாலத்துள்ளது! பிறிதொரு காலத்திலில்லாததால்! அது காலத்தாலந்த முடையதாம்! கடம்! படம் அன்று ஆதலால் இவை வஸ்துவினால் அந்த முடையதாம்! ஆகலான் இவை யாவுமின்றியுள்ளதான அப் பரம்பொருள் உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள கூடஸ்த சொரூபப் பிரஹ் மமே யாமென்று அநுபூதி பெற்று அநுபூதி சொன்ன தாம் என்றுணர்க!

கந்தரநுபூதி மூலமும்

நீலகண்டீய உரை விளக்கமும்

முற்றிற்று

ஆறிரு தடந்தோள்வாழ்க! அறுமுகம் வாழ்கவெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க! குக் குடம் வாழ்க செவ்வேள் !
ஏறிய மஞ்ஞைவாழ்க யானை தன் அணங்கு வாழ்க!
மாறிலா வள்ளிவாழ்க வாழ்க சீர் அடியார் எல்லாம்!

ஓம் சரவண பவா !

ஓம் சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!

